தனி சுற்றுக்கு மட்டும்

# வித்யா வாணி

கலியுகம் 5121 விஹாரி வருடம் ஆடி (ஜூலை 2019)

நூல்-3 ஏடு-4 Vol-3 Issue-4

குரு பூர்ணிமா இதழ்






## வரைவு தேசிய கல்விக்கொள்கை குறித்த கருத்தரங்கு

சென்னை வேப்பேரி நாள் -22.06.2019





விஞ்ஞான் மேளா

விவேகானந்தா வித்யாலயா-குரோம்பேட்டை





விவேகானந்தா வித்யாலயா -திருவொற்றியூர்



வித்யாபிரவேஷ்



அக்ஷராப்பியாசம்

– விவேகானந்தா வித்யாலயா-சிட்லபாக்கம்




ஆண்டு விழா – விவேகானந்தா வித்யாலயா கடம்பத்தூர்



வித்யாபிரவேஷ்-
M.B.S.விவேகானந்தா வித்யாலயா, ஆரணி



நூல் : 3 ஏடு : 4



# வித்யா வாணி

தனிச்சுற்றுக்கு மட்டும்

வித்யாபாரதி - தமிழ்நாடு வெளியிடும் காலாண்டு இதழ்


சமீபத்தில் மத்திய அரசு அறிவித்த வரைவு கல்விக் கொள்கை குறித்த கருத்தரங்கு ஒன்றை வித்யா பாரதி தமிழ்நாடு ஏற்பாடு செய்து இருந்தது. சென்னை வேப்பேரி அகர்வால் வித்யாலயாவில் 22.6.2019 அன்று நடைபெற்ற இக்கருத்தரங்கில் ஒரு கல்வியாளர், கல்வி நிர்வாகி, அரசியல் தலைவர், பத்திரிகையாளர், ஆன்மீக குருமார்கள் என பல தளங்களைச் சேர்ந்த பெரியவர்கள் தங்கள் கருத்துக்களைப் பதிவு செய்தனர். இதில் சுமார் 200 பேர் கலந்து கொண்டனர். நாளைய மேம்பட்ட சமுதாயத்தை உருவாக்கக் கூடிய கருவியாகிய கல்வி குறித்து மிகவும் சிந்திக்கக் கூடிய ஒரு கூட்டம் உருவாகி வருவது, தமிழகம் சரியான திசையில் சென்று கொண்டிருக்கிறது என்கின்ற நம்பிக்கையை ஏற்படுத்துகிறது. இக்கருத்தரங்கில் நிறைவாகக் கல்வியாளர்கள் கல்வி நிறுவனம் நிர்வாகிகள் பொதுமக்கள் சமூக சிந்தனையாளர்கள் எனப் பல தரப்பினரின் கருத்துக்களைப் பெற்று வித்யா பாரதி 43 பரிந்துரைகளை மத்திய அரசுக்குச் சமர்ப்பிக்கவுள்ளது. அவை இந்த இதழில் வெளிவந்துள்ளது கல்வியாளர்கள் இதுகுறித்துக் கருத்துத் தெரிவிக்க விரும்பினால் நம் மின் அஞ்சல் முகவரிக்கு எழுதி அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்

வித்யாபாரதியால் ஏற்பாடு செய்யப்பட்ட விஞ்ஞான் மேளா ஜூலை 6ஆம் தேதி நம் பள்ளிகளில் மிக சிறப்பாக நடைபெற்றது. குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் சென்னை திருவொற்றியூர் விவேகானந்தா பள்ளி நிகழ்ச்சியைக் கூறலாம். அப்பள்ளியின் அழைப்பை ஏற்று 20 பள்ளிக்கூடங்கள் கண்காட்சியில் கலந்து கொண்டன. அதில் ஒரு பள்ளி மட்டும் 221 Exhibits காட்சிகளை வைத்திருந்தது. இடப்பற்றாக்குறை காரணமாக நிகழ்ச்சி ஏற்பாடு செய்த திருவொற்றியூர் பள்ளி தனது மாணவர்களின் பங்களிப்பைக் குறைத்துக் கொண்டு பிற பள்ளிகளுக்கு வாய்ப்பளித்தது. சிறந்த முறையில் விஞ்ஞான் மேளா ஏற்பாடு செய்த அப்பள்ளிக்கு நமது வாழ்த்துக்கள்.

ஜூன் மாதம் 29ஆம் தேதி 13 இடங்களில் நடைபெற்ற மாவட்ட அளவிலான ஆண்டு திட்ட சந்திப்பில் மொத்தம் 140 வித்யாலயங்களில் இருந்து 230 நபர்கள் கலந்து கொண்டனர். குறைந்த பட்ச 13 அம்ச செயல்திட்டம் அனைவர் மனதிலும் பதிந்துள்ளது. அதை நல்ல முறையில் நமது வித்யாலயங்களில் செயல்படுத்த வேண்டும். மேலும், சிசுவாடிகா, துவக்கக்கல்வி, இசை, சம்ஸ்கிருதம் ஆகிய விஷயங்களில் இன்னும் அதிகமான பயிற்சி கொடுக்க, வேலூர், விழுப்புரம், சேலம் ஆகிய 3 கோட்டங்களில் காலை 9மணி முதல் மாலை 5மணி வரை 3 அல்லது 4 நாட்கள் பயிற்சி அளிக்க முடிவு செய்யப்பட்டுள்ளது. தேதி மற்றும் பிற விவரங்கள் விரைவில் தெரிவிக்கப்படும். இதை நல்ல முறையில் நமது வித்யாலயங்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டுகிறோம்.

– ஆசிரியர்


முகவரி : Vitjya Vaani NDJA Vivekananda Vidyalaya School 3rd Main Road, M.K.B. Nagar, Vyasarpadi, Chennai - 600 039 email : vithyavaani@gmail.com Ph: 044-2345 2129

ஆசிரியர் : நா.கணேஷ் சொக்கலிங்கம்

# குரு பரம்பரை

தி.சக்கரவர்த்தி

பாரத பூமி பழம் பெரும் பூமி
நீரதன் புதல்வர் இந்நினைவகற்றாதீர்
பாரத நாடு பார்க்கெலாந் திலகம்;
நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதீர்!
பாரத நாடு பார்க்கெலாந் தெய்வமாம்
நீரதன் புதல்வரிந் நினைவகற் றாதீர்!

என்ற மகாகவி பாரதியாரின் பாட்டிற்கு இணங்க,

உலகிலேயே தொன்மையான, கலாச்சாரம், பண்பாட்டு வாழ்க்கை முறை, அறுபடாத, இடைப்படாத மற்றும் தொடர்ச்சியான வரலாற்றைத் தன்னகத்தே கொண்ட ஒரு நாடு பாரத நாடு என்றால் அது மிகையாகாது,

அத்தகைய சிறப்பிற்கும் மேன்மைக்கும் யாது காரணம் என்று ஆராய்ந்து பார்த்தால் கடவுளிடமிருந்து தொடங்கி இன்றுவரை மக்களின் நல்வாழ்விற்கும் நல்வாழ்கைக்கும் தேவையான நற்பண்புகளையும் வாழ்க்கை நெறிமுறைகளையும் உணர்த்தித் தாங்களும் கடைபிடித்து வழிகாட்டி வந்துள்ள குருமார்களே என்பது தெரியவரும்.

குரு என்றால் ‘கனமானது,’ ‘பெரியது’ என்று பொருள். அதாவது பெருமையுடையவர், மகிமை பொருந்தியவர் என்று அர்த்தம். குரு என்ற சொல் ஒரு தனி மனிதனைக் குறிப்பது மட்டுமன்று அது ஒரு தத்துவமும் தகுதியும் ஆகும். ‘கு’ என்பது இருளையும், ‘ரு’ என்பது போக்குவதையும் குறிக்கும். ‘குரு’ என்றால் இருளைப்போக்குபவர் என்று பொருள். அதாவது மாணாக்கர்களிடையே உள்ள அறியாமை (அஞ்ஞானம்) என்னும் இருளை அகற்றி நல்லறிவை, ஞானத்தைக் கொடுப்பவர் குரு.

குரு எனும் சொல் நிறச்செம்மையைக் குறிக்கும். சொல்லாட்சிகளை எண்ணும் போதும் நிறச் செம்மையை உளச் செம்மையை உணர்த்தும் ஆகுபெயராக மாறிச் செம்மையானவராக விளங்கும் ஆசிரியரை உணர்த்தும் குரு என்னும் செந்தமிழ்ச் சொல்லாக அமைந்துள்ளது. இது வடசொல் மட்டும் அன்று. மிகப்பழமையான சித்தர்பாடல்களில் குரு என்ற சொல் பரவலாக காணப்படுகிறது.

இந்துப் பண்பாட்டின்படி குருவை வணங்காத ஒருவன் அனாதை அல்லது அதிர்ஷ்டம் இல்லாதவன் என்று கருதப்படுகிறது.

குருஷேத்திரப் போர்க்களத்தில் ஸ்ரீகிருஷ்ணர், அர்ஜுனனுக்கு குருவாக இருந்து, பகவத் கீதையை புகட்டியதன் வாயிலாக குருவின் முக்கியத்துவத்தை விளக்குகிறார். குரு என்றும் சொல்லுக்கு இணையாக ஆசார்யன், ஆசிரியர், தேசிகன், ஆசான், வாத்தியார் என்ற சொற்களும் குருவின் விசேஷ குணங்களை ஒட்டி, வழக்கத்தில் உள்ளன. ஆசிரியர் மாணாக்களின் மாசுகளைக் களைபவராகவும், தேசிகன் நல்வழி காட்டுபவராகவும், ஆசார்யன் தான் சொன்ன நல்ல விஷயங்களுக்கேற்பத் தானே வாழ்ந்து காட்டுபவராகவும், ஆசான் அறிவில் மூத்தோனாகவும், வாத்தியார் அறிவைக் கொடுப்பவராகவும் கருதப்படுகின்றனர்.

ஸ்வாமி விவேகானந்தர் நாம் நமது பிரத்யேக அடையாளங்களைக் கூறும்போது (IDENTITY) ரிஷிகள், முனிவர்கள், ஞானிகள் பெயரைக் குறிப்பிட்டு, அவர்களது வழித்தோன்றல்கள் அல்லது வழியில் வந்தவர்கள் என்று கூறிக்கொள்வதில் நாம் பெருமைப்படுகிறோம் என்பதை மேற்கோள் காட்டுகிறார். இந்த வழக்கம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக வழக்கத்தில் உள்ளது. இதனையே குருபரம்பரை என்று அழைக்கிறோம்.

குருவிற்குப் பிறகு அவரது சீடன் அவனுக்குப் பிறகு அவனது சீடன் என்று வழி வழியாக சமுதாயத்திற்கு நல்லறிவையும், வாழ்க்கை யின் கோட்பாடுகளையும் உணர்த்தி, ஒருவன் அல்லது பலர் வழி காட்டும் முறையான குருபரம்பரை பாரதத்திற்கே உரித்தானது.

இந்த குருபரம்பரை உலகின் முதல் குருவாக விளங்கும் கடவுளிடமிருந்து தொடங்குகிறது என்று நமது ஹிந்து மதத்தில் முக்கியமான சித்தாந்தங்களை ஒட்டிய அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் ஆகிய பிரிவுகள் உணர்த்துகின்றன.

“சதாசிவ சமாரம்தாம் சங்கராச்சார்யமத்தியமாம்,
“அஸ்மதாச்சாரிய பர்யந்தாம் வந்தே குரு பரம்பராம் “
“லஷ்ம நாத சமாரம்பாம் நாதயாமுன மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் “
“ப்ரஹ்மானந்தா கு ரவ: ஸாக்ஷிதிஷ்டம் தைவம் ஸ்ரிய: பதி:
ஆச்சார்யா: ஸ்ரீமதாசார்யா: ஸந்து மே ஜன்மஜன்மனி”

குரு, ஆசார்யண் ஆசிரியர் இருளை அகற்றுகிறார், விஷயங்களைக் கற்றுத்தருகிறார் என்னும் போது யாருக்கு கற்றுத்தருகிறார்? என்ற கேள்வி எழுகிறது. அவர்களே மாணாக்கர்கள் அல்லது சிஷ்யர்கள் என்று கூறப்படுவர். நமது பாரத தேசத்தில் நிலவும் குரு சிஷ்யன் ‘ஆசார்யன்’ சீடன் இவர்களது உறவு மற்றும் சம்பந்தம் மிகவும் உயர்ந்தது மற்றும் புனிதமானது ஆகும்.

தீப்பிழம்பு போன்ற ஒழுக்கமும், தெளிந்த ஞானமும் நன்னடத்தையும் உள்ள குருவின் கீழ் அமர்ந்து கற்பதே முழுமையான ‘கல்வி’ என்று சுவாமி விவேகானந்தர் கூறுவதும்

” யத்யாசரதித் ஸ்ரேஷ்டஸ் தத்ததேவ இதரே ஜந:
ஸயத்பரமாணம் குருதே லோகஸ்த்துநுவர்ததே”

என்ற ஸ்ரீ கிருஷ்ண பகவானின் வாக்கும் இக்கருத்தினை உணர்த்துகின்றன.

‘’அன்பே உருவான குருவும்
ஆர்வமே உருவான சீடரும்’’

என்ற சொற்றொடருக்கு இலக்கணமாகத் திகழ்ந்த ஸ்ரீ இராமருஷ்ண பரமஹம்சருக்கும். சுவாமி விவேகானந்தருக்கும் இடையே இருந்த உறவு குரு சிஷ்ய சம்பந்தத்திற்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டாகும். அதுபோலவே சமர்த்த ராமதாஸ் - சத்ரபதி சிவாஜி, பகவான் கிருஷ்ணன் - அர்ஜுனன், விவேகானந்தர்- நிவேதிதை, பாரதியார் - பாரதிதாசன், ராமனந்தர் - கபீர்தாஸ் போன்ற மற்ற உதாரணங்களையும் நாம் காணலாம்.

ஆதிசங்கரர் காசியில் வாசம் செய்தபோது ஒரு நாள் கங்கைக்கு இக்கரையில் அவரும், அவரது சீடன் சனந்தனர் அக்கரையிலுமாக இருந்தனர் சங்கரர் குளித்துவிட்டு ஈரத்துணியுடன் நின்று கொண்டு, சனந்தனரை அக்கரையில் உலர்த்தப்பட்டிருந்த தனது காஷாயத்தைக் கொண்டு வர சொன்னார்.

சனந்தனர் அறிவுபூர்வமான சிந்தனையையும் தாண்டி பிரவாகமாக ஓடும் கங்கைத் தண்ணீரில் இறங்கி குருவை நோக்கி நடக்க ஆரம்பித்துவிட்டார். அப்பொழுது அதிசயமாக அவர் அடி வைக்கும் ஒவ்வொரு இடத்திலும் நீர்மட்டத்திற்கு மேலாக ஒரு தாமரை மலர்ந்து அவர் அடியைத் தாங்கியது. அதனால் அவர் “பத்மபாதர்” என்று அழைக்கப்பட்டார்.

இராமானுஜாச்சாரியாரின் முக்கிய சீடர்களுள் ஒருவரான கூரத்தாழ்வான் தனது குருவை காப்பாற்ற வேண்டி, அப்போது

இருந்த சோழராஜாவின் சபையில் தனது கண்களையே பிடுங்கிக் கொண்டார் என்பது வரலாறு. பிற்காலத்தில் இராமானுஜர் ஆணையை ஏற்று கூரத்தாழ்வான் காஞ்சிபுரம் சென்று அங்குள்ள வரதராஜரை ஸ்தோத்திரம் செய்து பார்வை பெற்றதோடு அல்லாமல், அவருக்கும் அவரோடு சம்பந்தப்பட்டவர்களுக்கும் மோட்சம் கிடைக்கும் எனும் வரமும் பெற்றார். இதனை அறிந்த இராமானுஜர் எனக்குக் கிடைக்காத பேறு, தன் சீடனுக்குக் கிடைத்துவிட்டதே என்று பொறாமை கொள்ளாமல், கூரத்தாழ்வான் சம்பந்தத்தால் எனக்கு மோட்சம் கிடைத்துவிட்டதென குதித்துக் குதித்து மகிழ்ந்தார் என்னும் சம்பவம் சீர்மையான குரு சிஷ்ய உறவுக்கிற்கு மற்றோர் உதாரணம் ஆகும்

சீக்கிய குருவான குருகோவிந்சிங் ‘கல்சா’ என்கிற அமைப்பை ஏற்படுத்தும் பொழுது ‘நரபலி வேண்டுமென அவரது சீடர்களிடம் கேட்டபோது ஐந்து நபர்கள் ஒருவர் பின் ஒருவராக தாங்கள் தயாராக வந்த சம்பவம் குரு பக்தியை வெளிப்படுத்தும் முறையில்



அமைகிறது. தனது குருவான சாந்தீபினி மகரிஷியின் ஆஸ்ரமத்தில் கல்வி கற்கும் போது குருவின் கட்டளையை ஏற்றுக் காட்டிற்குச் சென்று சுள்ளிக்கட்டைகளை கொண்டுவரும் பணியைச் செய்ததுவும் அவருக்கு குரு தட்சணையாக அவரது இறந்த மகனை உயிருடன் மீட்டுக் கொண்டு வந்த கொடுத்ததுவும் குருபக்திக்கு மற்றோர் எடுத்துக்காட்டு.

இந்து சாம்ராஜியத்தை நிறுவிய சத்ரபதி சிவாஜி, அவரது வெற்றியினைக் குரு சமர்த்த இராமதாஸ் காலடியில் அர்ப்பணம் செய்து, பிறகு குருவின் ஆணைப்படி அவரது பிரதிநிதியாக அரசாண்டது போன்ற எண்ணற்ற உதாரணங்களை நமது பாரத தேசத்தில் காணலாம்.

அத்வைத சித்தாந்தத்தின்படி தேவர்களின் முதல் குரு, தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமி, ப்ரம்மாவின் குமாரர்கள் எனப்படும் சனகாதி முனவர் நால்வருக்கும், சின்முத்திரையில் அமர்ந்து ஞானத்தைப் (பேறறிவை) போதித்தார். இதில் சிறப்பு என்னவென்றால் அவர் யோகநிலையில் இருந்து கொண்டே மாணாக்கர்கள் நால்வருக்கும் தான் வாய் திறவாமல் மௌனமாக இருந்து பாடம் போதித்தார், எனினும் அவர்கள் கற்க வேண்டியவற்றை ஐயமின்றி கற்றனர் என்று கூறப்படுகிறது. இதையே

கல்லாலின் புடை அமர்ந்து நான்மறை ஆறு
அங்கம் முதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கு அப்பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்தனை இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன்னவரை நிலையமால்
நினைந்து பவத் தொடக்க வெல்வாம்

என்ற திருவிளையாடற் புராணப்பாடல் உணர்த்துகிறது

இதன் பொருள் எதைக் கற்பிக்கிறோமோ அதன்படி வாழ்ந்து காட்டுவது குருவின் லக்ஷணம் என்று தெளிவாகிறது. “Education is caught rather than taught”.

தக்ஷிணாமூர்த்தி ஸ்வாமிக்குப்பிறகு தத்தாத்ரேயர், நாராயணன், பிரம்மா, வசிஷ்டர், சக்தி, பராசரர், வியாசர் என குருபரம்பரை வரிசை தொடருகிறது.

விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ க்ருஷ்ண பகவான் “ ஜகத்குரு” என்று போற்றப்படுகிறார் (கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்). அர்ஜுனனின் காரணமாக பகவத் கீதையை உலக நன்மைக்காக அருளுவதோடன்றி, அர்ஜுனனிடம் கர்ம யோகத்தின் அவசியத்தை (action) உணர்த்தும் அவர், அர்ஜுனனுக்காக ஏற்றுக் கொண்ட தேரோட்டித் தொழிலைச் சிரத்தையுடன் செய்து, முன்னுதாரணமான ஆசிரியராக விளங்குகிறார். (Teacher is not a mere preacher; he must be a role model, practise what he preaches and thus influence the student)

மேலும் கீதையில் பகவான் “ யத்யத் ஆசாரதி ஸ்ரேஷ்ட தத் ததேவ இதரே ஜந: ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ்த்தநுவர்த்ததே”

என்னும் கீதவாக்கியத்தால், குரு தானே வாழ்ந்து காட்டி பண்புகளைப் போதிக்க வேண்டும் என உணர்த்துகிறார்.

“குரு” என்னும் சொல் வடமொழிச் சொல்லும், தமிழ்ச்சொல்லும் ஆகும்.

கல்வி கற்பிக்கும் ஆசிரியரை, குருவை இப்பூவுலகில் நாம் பிறக்கக் காரணாமாயிருந்த பெற்றோர் மற்றும் நமது வாழ்க்கையின் முடிவான குறிக்கோளாகக் கருதப்படும் பேரின்ப நிலையை (மோட்சம்), அளிக்கும் தெய்வத்திற்கு நிகராகவும் மேலாகவும் எண்ணுவது நமது தேசத்தின் மரபு.

வைணவ சம்பிரதாயத்தின்படி ஒருவர் இறந்து விட்டால் அவர் “ஆசார்யன் திருவடியை” அடைந்தார் என்று கூறும் வழக்கம் இங்கு குறிப்பிடத்தக்கது. இதையேதான் வைணவ ஆச்சார்யர்களில் முக்கியமானவரான மணவாள மாமுனிகளும்,

“ஞானம் அனுட்டானம் இவை நன்றாகவே உடையரான குருவை அடைந்தக்கால மாநிலத்தீர்
தேனார் கமலத் திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும்’’

என்றுணர்த்துகிறார்

பத்தாம் திருமுறையான திருமந்திரத்தில் திருமூலர்

“தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குரு உரு சிந்தித்தல் தானே’’

என்று ஆசிரியர்பால் இருக்க வேண்டிய பக்தியையும், அவரது மேன்மையையும் உரைக்கிறார். ஆசிரியரின் இலக்கணத்தை

''குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியலறிவோ டுயர்குணமினையவும்
அமைபவன் நூலுரையாசிரி யன்னே''

எனும் பவணந்தி முனிவர் இயற்றிய நன்னூலில்(26) காணலாம். அவையாவன

* தெய்வ நம்பிக்கை உள்ளவராகவும், அதை ஊட்டுபவராகவும் இருத்தல்

* உயர்ந்த லட்சியம் உடையவராகவும், அத்தகைய லட்சிய புருஷர்களாக மாணாக்கர்களை உருவாக்குபவராகவும் இருத்தல் ( உம்: சமர்த்தராமதாஸ்-சிவாஜி )

* நிறைவான அறிவு, ஞானம் அமைத்திருப்பதோடு மட்டுமன்றி சொல்வன்மை உடையவராயிருத்தல்

* மாணவர்களின் சந்தேகங்கள் முழுவதும் தீரும்வரை, பொறுமை காத்து சினம் கொள்ளாமல் பூமியைப்போன்று பொறை உடையவராயிருத்தல்.

* அளக்க முடியாத, அசைக்க முடியாத, ஆணித்தரமான, உறுதி கொண்ட கல்வி அறிவு உடையவராயிருத்தல் (மலை) பொருள் வளம் மிகுந்து இருத்தல்

* தராசை போல் குடிப்பிறப்பு, செல்வவளம், போன்ற வேறுபாடுகளைப் பாராமல் அனைத்து மாணாக்கர்களையும் சமமாகப் பாவித்துக் கற்பித்தல், அவர்கள் தரத்தை நிர்ணயித்தல் ( உம் கிருஷ்ணர் குசேலர் : ஆசிரியர் சாந்தீபினி )

* மலரைப்போல் முக மலர்ச்சியோடும், மாணவர்களைக் கவருபவராகவும், மென்மையானவராகவும் இருத்தல்

* கால, தேச, சூழ்நிலைகளை ஒத்து மென்மேலும் கற்பவராகவும், கற்பிக்கும் நுட்பங்களில் தொடர்ந்து தேர்ச்சி வளர்த்து கொள்பவராகவும், உலகியல் வாழ்விற்கும் (living), மேலான வாழ்க்கைக்கும் (life) தேவையான ''பர'' மற்றும் ''அபர'' வித்தயைக் கற்பிப்பவராகவும் இருத்தல்.

இத்தகைய குருமார்களின் மூலம் நாளைய பாரதம் உயர்வாக அமையப்போகிறது என்பதில் ஐயமில்லை, இது திண்ணம்.

---

# என் உள்ளம் கவர்ந்த பேராசிரியர்கள்

**பேராசிரியர் டாக்டர் வன்னியராஜன் முன்னாள் திருவேடகம் விவேகானந்தா கல்லூரி முதல்வர்**

1947 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் கொள்ளையரிடமிருந்து சுதந்திரம் பெறுவதற்கு சில நாட்கள் முன்னர் விருதுநகரில் சமுதாயப் பெரியோர்களால் நெடு நோக்குப் பார்வையோடு பின்தங்கிய கிராமம் மாணவர்களின் நலனுக்காக துவக்கப்பட்ட கல்லூரி விகடன் செந்தில்குமார் கல்லூரி ஆகும். அங்கு நான் யுனிவர்சிட்டி கோர்ஸ் பி.காம். மற்றும் எம்.காம். பயின்றேன் என்னுடைய பேராசிரியர்கள் மும்மூர்த்திகள் அவர்களை வாழ்வில் மறக்க இயலாது அவர்களுடைய நினைவை என்றென்றும் போற்றுகிறேன்.

முதலாமவர் டாக்டர் எம்.பி. சுப்பிரமணியன் அவர்கள் கேரளத்தைச் சேர்ந்த இளம் பேராசிரியர் திறமை மிக்கவர் விருதுநகர் கல்லூரியில் எம்.காம். படிக்கும்போது துறைத் தலைவராக அவர்களை கேரளத்திலிருந்து கல்லூரியின் செயலர் பெருமதிப்புடன் அழைத்து வந்தார். அவர் ஒரு முன்னுதாரணமான பேராசிரியர் தொடர்ந்து மூன்று மணி நேரம் ஓய்வின்றி வகுப்பு நடத்த கூடியவர். பொருளாதார கருத்துக்களை மிக எளிமையாக படங்களுடன் விளக்குவார். அதன் தாக்கம் எனது வீட்டில் எனது சிறிய அறையை சுற்றி சுவரில் டாக்டர் எம் பி சுப்பிரமணியன் அவர்கள் வரைந்த பொருளாதார படங்களை வரைந்து ஒட்டி இருந்தேன். தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும் திரு எம் பி சுப்ரமணியம் அவரிடம் பயின்ற மாணவர்கள் பின்னாளில் தமிழகம் முழுவதும் பல்வேறு கல்லூரிகளில் பேராசிரிர்களாகளாகவும், துறைத்தலைவர்களாகவும், கல்லூரி முதல்வர்களாகவும் உயர்ந்தனர். தாயின் அன்பு, தந்தையின் பராமரிப்பு, ஆசிரியரின் வழிகாட்டுதல், ஆட்சியாளரின் பாதுகாப்பு, இறைவனின் பெருங்கருணை என ஐந்து விதமான பங்களிப்பு செய்பவர் முன்னுதாரணமான ஆசிரியர் என சுவாமி சித்பவானந்தஜி கூறுவார். அப்படிப்பட்டவர் டாக்டர் எம்.பி. சுப்ரமணியம் அவர்கள். தேசத்தின் அடுத்த பரம்பரையை நிர்மாணிக்கும் மகத்தான பொறுப்பு ஆசிரியர்கள் உடையது என்பதனை தனது வாழ்வின் மூலம் வாழ்ந்து காட்டுபவர் அவர் வணிகவியல் துறை ஆராய்ச்சிப் பணியில் தென்பாரதத்தில் குறிப்பிடத்தக்க பேராசிரியராக அவர் திகழ்பவர்



இரண்டாவது பேராசிரியர் டாக்டர் எம்.ஏ. அருணாச்சலம் அவர்கள் வணிகவியல் ஆரம்ப நிலையிலிருந்து முதல் நிலை வரை எனக்கு பேராசிரியராக இருந்தவர் அக்கவுண்டன்சி பாடத்தில் நிபுணத்துவம் நிறைந்தவர். அது சம்பந்தமாக பாட நூல்கள் பல எழுதியுள்ளார். பல பல்கலைக்கழகங்களில் அப்புத்தகங்கள் பாடப்புத்தகமாக உள்ளன. பட்டமேற்படிப்பில் இப்பாடத்தில் பல்கலைக்கழக அளவில் நான் முதல் மதிப்பெண் பெற இவர் காரணமாக இருந்தார் பின்னாளில் அழகப்பா பல்கலைக்கழகத்தின் வணிகவியல் துறை பேராசிரியர் ஆகவும் அதன் பதிவாளராகவும் பணிபுரிந்தார். கல்விக்காகவே தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர் பேராசிரியர் அழகப்பா பல்கலைக்கழகத்தில் இருந்தபோது வகுப்பில் பாடம் நடத்திக் கொண்டிருக்கும்போது அவர் உயிர் பிரிந்தது. அவர் ஒரு ஆதர்சன பேராசிரியர்

மூன்றாவது பேராசிரியர் டாக்டர் நீலமேகம் அவர்கள். நான் B.Com M.Com பயிலும்போது எல்லா ஆண்டுகளிலும் அவரிடம் பாடம் கற்றேன். சிரத்தையின் வடிவம் டாக்டர் நீலமேகம் அவர்கள் பின்னாளில் அழகப்பா பல்கலைக்கழகத்தின் கார்ப்பரேட் செகரட்டரிஷிப் துறையின் தலைவரானவர் வணிகவியல் துறை ஆராய்ச்சிப் பணியில் முன்னணி வகிக்கும் பேராசிரியர் பல்கலைக்கழக பணியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும் ஆராய்ச்சிப் பணியில் இருந்து அவர் ஓய்வு பெறவில்லை. தனது 87வது வயதில் வணிகவியல் ஆராய்ச்சிப் பணியை தொடர்ந்து செய்து கொண்டிருக்கும் ஓய்வு அறியா முன்னுதாரணம் அவர் கல்வித்துறையில் அடித்தளம் எனக்கு அமைத்த மும்மூர்த்திகளில் வாழ்நாளில் என்றென்றும் மறக்க இயலாது



# ஒரு குறள் கதை

அர்ஜுனனும், கிருஷ்ணரும் தெருவில் உலவிக் கொண்டிருந்த போது, ஒரு முதியவர் தர்மம் செய்யும்படிக் கேட்டார். அர்ஜுனன் ஆயிரம் பொற்காசுகளைக் கொடுத்தான். முதியவருக்கு மகிழ்ச்சி. ''ஆகா... இது நம் குடும்பத்திற்கு ஐந்தாறு ஆண்டுகளுக்குப்போதுமே!''என்றெண்ணி வீட்டுக்குப் புறப்பட்டார். இதைக் கவனித்த ஒரு திருடன், பொற்காசுகளை முதியவரிடமிருந்து பறித்துச் சென்று விட்டான்.

சில நாட்கள் கழித்து, மீண்டும் அவ்வழியே வந்த அர்ஜுனனிடம் முதியவர் நடந்ததைச் சொல்ல, விலையுயர்ந்த நவரத்தினக் கல்லைக் கொடுத்து, அதையாவது பத்திரமாக வைத்துக் கொள்ளும்படி கூறினான். முதியவரும் கவனமாக வீட்டுக்குக் கொண்டு சென்று, மனைவி, பிள்ளைகளிடம் கூடச் சொல்லாமல், பரணில் இருந்த பானையில் ஒளித்து வைத்து விட்டார். இதை அறியாத அவரது மனைவி பரணிலிருந்த பானையை எடுத்துக் கொண்டு ஆற்றுக்குத் தண்ணீர் எடுக்கச் சென்றாள். பானையைக் கழுவும் போது உள்ளிருந்த கல் ஆற்றில் விழுந்து விட்டது. அவள் பானையுடன் வீட்டில் நுழைந்த போது, வெளியே சென்றிருந்த வயோதிகர் அந்தக்குடத்தைப் பார்த்து அதிர்ச்சியாகி ''கல் எங்கே?'' என மனைவியைக் கேட்டார். எதுவும் அறியாமல் அவள் விழிக்க, ஆற்றிற்குச் சென்று பல மணி நேரம் தேடியும் பலனின்றி திரும்பினார்.

சில தினங்கள் கழித்து மீண்டும் கிருஷ்ணனும் அர்ஜுனனும் முதியவரைப் பார்க்கும்போது, அவர் நடந்ததைக் கூற, அர்ஜுனன் கிருஷ்ணனிடம், இவர் அதிர்ஷ்டக்கட்டை, என்றான். அதை ஆமோதித்த கிருஷ்ணன், ''இந்த முறை நீ இவருக்கு இரண்டு காசு மட்டும் கொடு,'' என்றார். அர்ஜுனனும், அதைக் கொடுத்து அனுப்பி விட்டு கண்ணனைப் பார்த்து, ''இரண்டு காசுகள் அவருக்கு என்ன மகிழ்ச்சியைக் கொடுத்து விடும்?''எனக்கேட்டான். எனக்கும் தெரியவில்லை. இருந்தாலும் என்ன நடக்கிறது பார்க்கலாம் வா'' எனக்கூறிய கண்ணன் அர்ஜுனனுடன் முதியவரைப் பின்தொடர்ந்தார்.

செல்லும் வழியில் மீனவர் ஒருவர் உயிருடன் வைத்திருந்த இரண்டு மீன்களை வாங்கிக் கொள்ளும்படி முதியவரிடம் கேட்டான். சிந்தித்த முதியவர், இந்தக்காசுகள் எப்படியும் தன் குடும்பத்திற்கு ஒருவேளை பசியைக் கூடப் போக்காது. அந்த மீன்களை வாங்கி ஆற்றிலேயே விட்டு, அதனால் புண்ணியமாவது மிஞ்சட்டும் எனத் தீர்மானித்தார். அப்படி வாங்கியதில் ஒன்றை ஆற்றில் விட்டார்.

இன்னொரு மீனின் தொண்டையில் ஏதோ சிக்கியிருப்பதைப் பார்த்த அவர், மீனின் வாயைப் பிளந்து பார்த்தார். அதைப் பார்த்ததும் வியப்பின் உச்சத்திற்கே சென்றார். அது அவர் மனைவி ஆற்றில் தவற விட்ட விலையுயர்ந்த கல். மகிழ்ச்சியின் மிகுதியால்' சிக்கியாச்சு' என்று கூச்சலிட்டார். அதே நேரம் தற்செயலாக அவ்வழியே, இவரிடம் கொள்ளையடித்த திருடன் வர, அவன் திடுக்கிட்டுத் தன்னைத்தான் முதியவர் கூறுகிறார் என்றெண்ணித் திரும்ப ஓடுகையில், கண்ணனும் அர்ஜுனனும் அவனைப் பிடித்து விட்டனர். அவனைச் சிறையில் அடைத்து விட்டு, அவன் வீட்டிலிருந்த திருட்டுப் பொருட்களைப் பறிமுதல் செய்தனர். அனைத்தையும் முதியவருக்குக் கொடுத்தனர்.

அர்ஜுனன் கிருஷ்ணனிடம், ''வாழ்வில்தான் எத்தனை வியக்கத்தக்க நிகழ்வுகள்! அதிலும் இது போன்ற நிகழ்வுகள் எப்படி நிகழ்ந்தது?'' என்று கேட்டான். கிருஷ்ணன் சிரித்துக்கொண்டே ''இவர், நீ முன்பு கொடுத்ததைத் தனக்கும் தன் குடும்பத்துக்கு மட்டுமே எடுத்துச் செல்ல வேண்டும் என எண்ணினார். அடுத்து நீ கொடுத்த விலையுயர்ந்த கல்லைத் தானும் பயன்படுத்தாமல், மற்றவருக்கும் பயன்படாமல் ஒளித்து வைத்திருந்தார். ஆகவே, அவையிரண்டும் அவரிடம் தங்கவில்லை. இப்போதோ தன்னிடமிருந்தது மிகக்குறைவானது என்றாலும், தனக்குப் பயன்படாவிட்டாலும், இன்னொரு உயிராவது வாழட்டுமே எனக் கருதினார். இந்தப் புண்ணியத்தால்தான் இழந்த செல்வத்துக்கும் மேலாகவே அடைந்தார். பொது நலமுள்ளவர்களுக்கே லட்சுமி தேவியின் அருள்மழை கிடைக்கும்,'' என்றார்.

இதையே,திருவள்ளுவப் பெருமகனார்

''அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு''

என்று பொய்யாமொழியில் மொழிந்துள்ளார்.ஆம்! அறம் இஃது என்று அறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரைத் திருமகள் தான்சேரும் திறன் அறிந்து அதற்கு ஏற்றவாறு சேர்வாள்.

**மணலி பா.கனிராஜன்**

# வரைவு தேசீயக் கல்விக்கொள்கை குறித்த கருத்தரங்கம்

தேசீயக் கல்விக்கொள்கை 2019 வரைவு அறிக்கையின் அடிப்படையில் தமிழக வித்யாபாரதி அமைப்பின் சார்பில் ஒரு கருத்தரங்கம் ''தேசீயக் கல்விக்கொள்கை 2019 தமிழகத்தின் பார்வை'' என்ற தலைப்பில் 2019 ஜூன் மாதம் 22 ம் தேதி சனிக்கிழமையன்று சென்னை எழும்பூரில் உள்ள அகர்வால் வித்யாலயத்தில் நடைபெற்றது. அதில் 84 பள்ளிகள் உட்பட 107 நிறுவனங்களில் இருந்து 202 பேர் பங்கு பெற்றனர்.

சென்னை இராஜலட்சுமி கல்விக் குழுமங்களின் தலைவர் திருமதி தங்கம் மேகநாதன் தலைமை தாங்கினார். அதில் தமிழக நர்சரி பிரைமரி மெட்ரிகுலேஷன் மேல்நிலை மற்றும் சி.பி.எஸ்.இ. பள்ளிகள் சங்கத்தின் மாநிலப் பொதுச்செயலாளர் டாக்டர் கே.ஆர் நந்தகுமார், தி வேதாந்தகேசரி மாத இதழின் ஆசிரியர் ஸ்வாமி மஹா மேதானந்தா, பத்திரிகையாளர் திரு மாலன், பேராசிரியர் ஆர் ஸ்ரீனிவாசன் மற்றும் உளுந்தூர் பேட்டை சாரதா மஹா வித்யாலயம் கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் செயலாளர் ஸ்வாமினி யதீஸ்வரி ஆனந்த பிரேமா பிரியாம்பா ஆகியோர் கலந்து கொண்டு தங்கள் கருத்துகளை பகிர்ந்து கொண்டனர்.

வித்யாபாரதி தட்சிண ஷேத்ர தலைவர் திரு சக்கரவர்த்தி அவர்கள் தனது வரவேற்புரையில் இந்த கல்விக்கொள்கையின் வரைவுத்திட்டத்தில் பல்வேறு வரவேற்கத்தக்க அம்சங்கள் உள்ளதை சுட்டிக்காட்டினார். ஒரு நாட்டின் வளமும் முன்னேற்றமும் அந்த நாட்டின் கல்வியைச் சாந்தே அமைகிறது. இக்கல்விக்கொள்கை தேசத்தின் வளர்ச்சியை நோக்கி அமைந்துள்ளது. மேலும் தேசியக் கல்விக் கொள்கையில் கூறப்பட்டுள்ள நல்ல விஷயங்களை நடைமுறைப்படுத்துவதில் ஆசிரியர் முக்கியப் பங்காற்றுவதால் அவர்களுக்குச் சரியான பயிற்சி தொடர்ந்து நடைபெற வேண்டும் என்று கூறினார். கல்வியானது கிராமங்களை நோக்கிச் செல்ல வேண்டும் என்றும் கூறி வந்திருந்த அனைவரையும் வரவேற்றார்.

திருமதி தங்கம் மேகநாதன் தலைவர் இராஜலட்சுமி கல்விக்குழுமம் பேசுகையில், புதிய கல்விக்கொள்கை தற்போதைய தேவைகளைக் கருத்தில் கொண்டு நமது புராதனக் கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றை உள்ளடக்கியுள்ளது. மனித மூளை 1 முதல் 10 வயது வரை மிகவும் வேகமாக வளர்ச்சியடையும் பருவமாதலால், அந்தக் காலகட்டத்தில் நன்னெறிக்கல்வியைப் பாடத்திட்டத்துடன் சேர்ந்து போதிக்க வேண்டும். பள்ளி மற்றும் கல்லூரிக் கல்வி பயிலும் மாணவர்களை மட்டுமல்லாது பெற்றோர், ஆசிரியர், சமுதாயம் ஆகியவற்றின் மீதும் கல்வி தாக்கத்தை ஏற்படுத்தும். புதிய கல்விக்கொள்கை, எண்ணும் எழுத்தும் கல்வியின் அடிப்படை என்று வலியுறுத்துவதால் அது வரவேற்புக்குரியது. அனைத்து மொழிகளுக்கும் முக்கியத்துவம் தந்து மொழிகளின் வளர்ச்சிக்கும் அவற்றைக் கற்றுக் கொள்ளவும் கல்விக் கொள்கை வகை செய்கிறது. உயர் கல்வி மனித வள மேம்பாட்டுக்கு வழி வகை செய்வதாக அமைய வேண்டும் என்று கூறினார்.

**புதிய கல்விக்கொள்கை மெக்காலே கல்வித்திட்டத்தில் இருந்து விடுதலை அளிக்கும் என்ற நம்பிக்கையை தருகிறது.**

திரு கே.ஆர் நந்தகுமார் (தமிழ்நாடு நர்சரி, பிரைமரி, மெட்ரிகுலேசன், மேல்நிலை மற்றும் சி.பி.எஸ்.இ பள்ளிகள் சங்கத்தின் மாநில பொதுச்செயலாளர்) பேசுகையில், புதிய கல்விக்கொள்கை மாணவர்களின் முழுமையான பன்முக வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டுள்ளது. பள்ளிப்பாடங்களைக் குறைத்து மாணவர் தம் சிந்தனைத் திறன் மேம்பட வழிவகுக்கிறது. பள்ளித் தேர்வுகளுக்கும் பிற கூடுதல் பாடத்திட்டத்திற்கும் சம வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பள்ளியிலும் உளவியல் நிபுணர்கள் மூலம் மாணவர் தம் உளநலன் பாதுகாக்கப்பட வேண்டும். கல்வியானது மனிதவள மேம்பாட்டுத் துறையின் கீழ் அல்லாமல் தனி அமைச்சகத்தின் கீழ் வரும் என்பது வரவேற்கத்தக்கது. ஆசிரியர் மாணவர் விகிதம் 1 : 25 என்பது போற்றுதலுக்குரியது. பள்ளிகளில் சுற்றுப்புற சுகாதாரம் மேம்பாடைய வேண்டும். புதிய கல்விக் கொள்கை பற்றிய விழிப்புணர்வு பெற்றோருக்கும் ஏற்படுத்த வேண்டும்.




யோகா மற்றும் நமது பாரம்பரியக் கலைகளைப் பள்ளியில் நடத்தத் தேவையான போதிய ஆசிரியர்கள் பயிற்றுவிக்கப்பட வேண்டும். பாடத்திட்டம் எல்லாப் பள்ளிகளிலும் கட்டாயமாக்கப்பட வேண்டும். அருகில் அமைந்துள்ள பள்ளிகளை ஒன்றிணைத்து ''கல்விக்குழு வளாகம்'' அமைப்பது என்ற கருத்து மிகவும் வரவேற்கத்தக்கது என்றார்.

சுவாமி மகா மேதானந்தா, (வேதாந்த கேசரி, கலை மற்றும் ஆன்மிக மாத இதழின் ஆசிரியர்) பேசுகையில், புதிய கல்விக்கொள்கை மிகவும் நன்றாக வடிவமைக்கப்பட்டுள்ளது. ஆனால் அவற்றை நடைமுறைப்படுத்துவதில் சில சிக்கல்களும்

உள்ளன. மனனம் செய்து ஒப்புவித்தலைத் தவிர்த்து மாணவர்கள் பாடங்களைப் புரிந்து கற்றுக்கொள்ள கல்விக்கொள்கை ஊக்குவிக்கிறது. தேர்வுகளும் அதை ஒட்டியே அமைய வேண்டும் ஆசிரியரும் பெற்றோரும் மாணவரின் கல்வி முன்னேற்றத்தில் பெரும் பங்கு வகிக்கின்றனர். இருவருமே முக்கியம் என்பதால் ஒருவருடைய பொறுப்பை மற்றவர் மேல் திணிப்பது என்பது தவறு.

யோகா, இசை, விளையாட்டு, தோட்டக் கலை, மரவேலை போன்றவற்றுக்கு முக்கியத்துவம் தந்திருப்பது வரவேற்கத்தக்கது. மாணவர் வெறும் பாடம் சார்ந்து மட்டுமல்லாது ஏதாவது ஒரு வேலைத்திறமையைக் கொண்டிருக்க வேண்டும். கலை, அறிவியல் மற்றும் பாடத்திட்டத்தை ஒருங்கிணைப்பது வரவேற்கத்தக்கது. தேசிய அளவில், மொழிகட்கும் கணிதத்திற்கும் கலைக்களஞ்சியம் அமைப்பது மிகவும் நல்ல செய்தி. தேசியத்திறனறி போட்டிகள், தேசியக்கல்வித்திட்டம் மற்றும் சக மாணவரோடு சேர்ந்து கற்றல் போன்றவை மாணவர் மேம்பாட்டுக்குத் துணை செய்யும்.

இக்கல்விக்கொள்கை ஆன்மீக அடிப்படையிலான கல்வி என்பதை வலியுறுத்தவில்லை. நன்னடத்தை நெறிகள் ஆன்மீகத்தின் அடிப்படையில் அமைந்தால்தான் தேசத்திற்கு நன்மை பயக்கும். பரா வித்யா மற்றும் அபரா வித்யா ஆகிய இரண்டின் கூறுகளையும் மாணவர் கற்க ஏற்பாடு செய்தல் வேண்டும் என்றார்.

**தி**ரு மாலன், பத்திரிகையாளர் பேசுகையில், ஒவ்வொரு தனிமனிதனும் ஏதாவது ஒன்றைக் கற்றுக் கொள்ளும் திறன் படைத்தவராகவே இருப்பதால் கல்வி அத்திறனை மேலும் வளர்ப்பதாக அமைய வேண்டும். ஒரு குழந்தையின் வளர்ச்சி அக்குழந்தையின் தனித்திறன் மற்றும் அதன் மனவெழுச்சியின் அடிப்படையில் அமைவதால், இவை இரண்டையும் சமன்படுத்துவதாகக் கல்வி அமைதல் வேண்டும். புதிய கல்விக்கொள்கை சமுதாயத்தின் சவால்களை எதிர்கொண்டு மாணவரின் திறன் மற்றும் அறிவு வளர்ச்சிக்குத் துணை செய்யும். குழந்தையின் கல்வி ஆரம்ப நிலையில் பாதுகாப்பு என்பதை மிக முக்கியமாகக் கொண்டு பாடத்திட்டம், குழந்தையின் பாதுகாப்பு மற்றும் கல்வித்திட்டத்தை ஒன்றிணைக்க வேண்டும் என்றார்.

**பே**ராசிரியர் இரா சீனிவாசன், கல்வியாளர் பேசுகையில், இக்கல்விக்கொள்கை எந்த அரசியல்வாதிகளின் தலையீடும் இல்லாமல் தயாரிக்கப்பட்டுள்ளது. கொள்கையின் வரைவுத்திட்டம் தயாரிக்கப்படும் முன்பு 74 கல்வி நிறுவனங்களைச் சார்ந்த 217 சிறந்த கல்வியாளர்களுடன் விவாதம் நடத்தப்பட்டுள்ளது. பாரம்பரியத்திற்க்கும் நவீனத்திற்க்கும் வேறுபாடு உள்ளது. யாராவது தனது முன்னோர்கள் பழைமை வாதிகள் என்றும், அவர்கள் தவறு செய்துள்ளனர் என்றும் கருதி அதனடிப்படையில் நவீனக்கல்வியை வடிவமைத்தால் மிகப் பெரும் தவறாகிவிடும். இக்கல்விக்கொள்கை தேசத்தை மையப்படுத்தியதாக அமைந்துள்ளது.

**கல்விக்கொள்கை தரமுள்ளது, பாடத்திட்டம் தரமானது, ஆனால் பயிற்றும் முறை தரமிக்கதாக அமையாவிடில் பயனில்லை. ஆகவே பயிற்றுவிக்கும் ஆசிரியர் சவால்களை ஏற்றுக் கொள்பவராக இருக்க வேண்டும்.**

கல்வி என்பது மனிதனை தன்னுடைய கலாசாரம், மொழி ஆகியவற்றில் இருந்து பிரித்து விடாமல், நமது பண்பாட்டை உயர்த்துவதாக அமைய வேண்டும். சட்டக்கல்வி, தொழில்நுட்பக்கல்வி போன்றவை இருமொழிகளில் அமையும் என்பது வரவேற்கத்தக்கது. பாடத்திட்டம் மற்றும் தொழிற்கல்வியை ஒன்றிணைக்க உள்ளது.

இக்கல்விக்கொள்கை, பட்டியல் இனத்தோர், பிற்படுத்தப்பட்டோர் மற்றும் பின்தங்கியோர் ஆகியவர்களை மேம்படுத்த அமைக்கப்பட்டுள்ளது. பாலி மொழி, பாரசீக மொழி மற்றும் பிராக்ருதம் போன்ற மொழிகளின் மேம்பாட்டுக்கும் கல்விக்கொள்கை வழிவகுக்கின்றது. மாணவரைப் பன்மொழிப்புலமை மிக்கவராகவும் மொழிகளைக் கற்பதில் மன மகிழ்ச்சியை அடைபவராகவும் இக்கல்விக் கொள்கை உருவாக்கும். மொத்தத்தில் மொழிகளின் மூலம் தேசீயத்தை வலிமைப்படுத்த மொழிக்கொள்கை வழிகோலும் என்றார்.

**ஸ்**வாமினி ஆனந்த பிரேமா பிரியாம்பா (செயலாளர் ஸ்ரீ சாரதா மஹாவித்யாலாயம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி உளுந்தூர்பேட்டை) பேசுகையில், மெக்காலே கல்வித்திட்டத்தில் இருந்து விடுதலையை இக்கல்விக்கொள்கை அளிக்கும் என்ற நம்பிக்கை பிறக்கிறது. நமது முன்னோர்களின் வரலாறு நமக்கு மிகப்பெரிய தன் நம்பிக்கையும் சுய வலிமையும் கொடுக்கும். ஆகவே அவற்றை நம் மாணவர்க்குக் கற்றுத் தர வேண்டும். தனியார் பள்ளிகளில் வேலை செய்யும் ஆசிரியர் அரசுப் பள்ளிக்குச் சென்றவுடன் அவர் மனநிலை மாறுகிறது. வேலையில் சுணக்கம் ஏற்படுகிறது. இதைப்போக்கும் வகையில் கல்வித்திட்டம் அமைய வேண்டும்.

எப்படி சிந்திப்பது, எதைச் சிந்திப்பது, என்ன கற்பனை செய்வது போன்றவைகளை மாணவர்க்குத் கற்றுத் தரவேண்டும். பலவீனம் எதையும் சாதிக்கமுடியாது. அது போலவே பலவீனமான ஆசிரியர் எதையும் கற்றுத்தரமுடியாது. கல்வித்திட்டம் ஆசிரியரை வலிமை படைத்தவராக மாற்ற வேண்டும். கல்விக்கொள்கை தரமுள்ளது, பாடத்திட்டம் தரமானது, ஆனால் பயிற்றும் முறை தரமிக்கதாக அமையாவிடில் பயனில்லை. ஆகவே பயிற்றுவிக்கும் ஆசிரியர் சவால்களை ஏற்றுக் கொள்பவராக இருக்க வேண்டும்.

இக்கல்விக் கொள்கை மாணவர் சிந்தனையைத் தெளிவு படுத்தி ஊக்குவித்து தேசத்தின் எதிர்காலத்தை மையப்படுத்தி அமைந்துள்ளது. இக்கல்விக் கொள்கை அமுல்படுத்தப்பட்டால் தேசத்தின் எதிர்காலம் சிறப்பாக அமையும்.

**ஸ்ரீ**.இரா.இரவீந்திரன் (பொருளாளர். வித்யாபாரதி தமிழ்நாடு) அவர்கள் கருத்தரங்கத்தின் தீர்மானங்களை முன்மொழிந்து வாசித்தார். வந்திருந்த அனைவரும் அதை ஏகமனதாக வரவேற்றனர். நன்றியுரைக்குப் பின் தேசீய கீதத்துடன் நிகழ்ச்சி நிறைவுபெற்றது.

**தொகுப்பு : K.பொன்ராமன்**

# கல்வி செல்வம் தந்த வள்ளல்கள்...

பசுத்தாய் கணேசன்

நமது நாடு அடிமைப்பட்டிருந்தபோதே இந்த நாட்டின் மக்கள் கல்வியில் சிறந்து விளங்க வேண்டும் என்று பாரதி சொன்னதுபோல, கல்வியில் சிறந்த தமிழ்நாடு என்றும் தாழ்ந்துவிடக்கூடாது என பல செல்வந்தர்கள், சமுதாய அக்கறை கொண்டவர்கள் தனது செல்வத்தை கல்விக்காக வாரி வழங்கினார்கள்.

தமிழில் பல பாடல்கள் கல்வியின் அவசியத்தை வலியுறுத்துகிறது. ஔவை எளிமையாக, பிச்சைபுகினும் கற்கை நன்றே என்று கூறிவிட்டார். ஒருவன் பிச்சை எடுத்தாகிலும் கல்வியைப் பெற வேண்டும் என்பது எத்தனை அழுத்தம்.

பிச்சை எடுப்பது தான் சமுதாயத்தில் மிகவும் கீழ்நிலை. அந்த கீழ்நிலையில் இருந்தாலும்கூட கல்வி பயிலாமல் விடகூடாது என்பதற்கு காரணம், கல்வியால் ஏற்படும் ஏற்றம் கல்வி எளியோர்க்கும் சென்றடைய வேண்டும் என்ற சிந்தனையோடு 1942ஆம் ஆண்டு துவக்கப்பட்டது தான் செங்குந்தர் கல்விக் கழகம். ஒரு தனிநபர் தன் சமுதாயத்தின் பெயரால் அதனை அமைத்துள்ளது சிறப்பு வாய்ந்ததாக இருக்கிறது.



சைவப் பெருவள்ளலாக திகழ்ந்த வி.வி.சி.ஆர். முருகேச முதலியார், எஸ். மீனாட்சி சுந்தர முதலியார் மற்றும் சிலர் சேர்ந்து, செங்குந்தர் கல்விக் கழகத்தை 24.12.1942ஆம் ஆண்டு பதிவு செய்தனர். அதன் நிர்வாகத்தின் கீழ் முதன் முதலில் செங்குந்தர் உயர்நிலைப் பள்ளியை 1.6.1944ஆம் ஆண்டு துவக்கினர்.

**கல்வி வள்ளல் திரு,வி.வி.சி.முருகேச முதலியார்,** திரு வி.வி.சி. இராமலிங்கம், திருமதி. கணபதியம்மாள் தம்பதியினருக்கு 1903ஆம் ஆண்டு, ஏப்ரல் 22ஆம் நாள் திருசெங்கோட்டில் மகனாகப் பிறந்தார்.

செல்வ குடும்பத்தில் பிறந்த இவர், முருகப்பெருமான் மேல் பக்தி கொண்டிருந்தார். ஒரு முறை செங்கோட்டு வேலவர் சன்னதியில் ஏட்டுப் பிரதியில் இருந்த வேலவர் பிள்ளைத் தமிழிலிருந்து ஒரு பாசுரத்தைக் கோயில் அர்ச்சகர் மனமுருகிப் பாடியதைக் கேட்ட இவர் மெய் சிலிர்த்துப்போனார். அதனைப் பக்தர்கள் பாடிப் பரவசப்பட வேண்டும் என எண்ணி அதனை திரு. தெய்வசிகாமணி என்பவர் துணைகொண்டு அச்சிட்டு நூல் வடிவில் பக்தர்களுக்கு வழங்க வழிவகை செய்தார்.

செங்குந்தர் கல்விக் கழகம் தோற்றுவிக்கப்பட்டபோது, 50,000 பொற்காசுகளை வழங்கி, அவர் தோற்றுவித்த கல்வி நிறுவனம் இன்று 75 ஆண்டுகளைப் பூர்த்தி செய்துள்ளது. நல்லார் செய்யும் உதவி கல் மேல் எழுத்தாக என்றும் நிலைத்திருக்கும் என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. மேலும் ஈரோடு சிக்கய்ய நாயகர் மாசனக்கல்லூரி நிறுவுவதற்காகவும் நன்கொடை வழங்கினார். பெண் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்த அவர், மதுரை டொக் பெருமாட்டியார் கல்லூரிக்கு ஆறாயிரம் பொற்காசுகளை அளித்தார்.

அன்றைய தமிழக முதல்வர் பக்தவத்சலம் அவர்களின் வேண்டுகோளை ஏற்று, பழனியில் தொழிற்சாலை துவங்க வைத்திருந்த இடத்தை கல்லூரி துவங்க அளித்தார். அந்த இடத்தில் பழனியாண்டவர் கலை மற்றும் பண்பாட்டுக் கல்லூரி நிறுவப்பட்டது.

மேலும் பல கல்விப் பணிகளுக்காக வாரி வழங்கி வள்ளல் இவர் ஆவார்.

**இவரது ஆன்மீக சேவை..**

தான் பிறந்த திருச்செங்கோட்டில் முருகனைக் காண மாலை நேரத்தில் வரும் பக்தர்கள் வசதிக்காக மலை மீது ஒளி விளக்குகளைப் பொருத்தினார். பழநியாண்டவர் உலா வருவதற்கு தங்கத்திருத்தேரும், தங்க மயில் வாகனமும் அளித்தார். கந்தவேல் முருகனுக்கு வைரவேல் ஒன்றையும் வழங்கினார். முருகனை தரிசிக்க வரும் பக்தர்கள் ஓய்வெடுக்க பழநி அடிவாரத்தில் திருமடம் ஒன்றையும் அமைத்துத் தந்தார்.

திருப்பதி திருவேங்கட ஏழுமலையானை வழிபட வரும் அடியவர்கள் தங்குவதற்கு திருமலையில் விடுதியை அமைத்துத் தந்துள்ளார். 1963ஆம் ஆண்டு பழனி மலைமீது விஞ்ச் (மின் இழுவை இரயில்) அமைத்துக்கொடுத்து ஓடச் செய்தார்.

செங்கோட்டு வேலவனுக்குத் தங்கக்காவடி சமர்ப்பணம் செய்தார். அங்கு கிரிவலைப்பாதையில் நான்கு திசைகளிலும் துர்க்கை அம்மன் ஆலயம் அமைத்தார். மதுரையில் தன்னாட்சி செய்து வரும் அன்னை மீனாட்சிக்குப் பல்லக்குச் செய்துதந்து அழகு பார்த்தவர்.

**சமுதாயத் தொண்டு..**

ஈரோட்டில் தனலட்சுமி பிரசவ வார்டு என்ற பெயரில் மகப்பேறு நிலையம் ஒன்றை நிறுவினார். காசநோய் எனும் டி.பி. தீர, ஈரோடு பெருந்துறையில் காசநோய் விடுதி மற்றும் ஆய்வுக்கூடம் கட்டித்தந்தார். இத்தகைய கல்விச் சேவை, ஆன்மீகப் பணி, சமுதாயப்பணிக்காக தனது செல்வத்தை அள்ளித் தந்த வள்ளல் வி.வி.சி.ஆர். முருகேச முதலியார் 30.3.1968ஆம் ஆண்டு முருகப்பெருமானின் இறையடி சேர்ந்தார்.

நல்லோர் செய்த திருப்பணி நாளும் வளரும் என்பதற்கு எடுத்துக்காட்டாக, அந்தக் கல்வி நிறுவனம் 75 ஆண்டுகளை பூர்த்தி செய்துள்ளது. செங்குந்தர் மேல்நிலைப்பள்ளியில் துவங்கியது.. செங்குந்தர் கல்வி நிலையம் தொடக்கப்பள்ளி, லலிதா கல்வி நிலையம் நடுநிலைப்பள்ளி என இரண்டு பள்ளிகளும் சேர்ந்து மூன்று பள்ளிகள் அரசு நிதி உதவி பெறும் பள்ளிகளாக உருவானது.

மேலும் சுயநிதிப் பள்ளிகளாக செங்குந்தர் நர்சரி, பிரைமரி பள்ளி, வி.வி.சி.ஆர். முருகேசனார் செங்குந்தர் மகளிர் மேல்நிலைப்பள்ளி, மீனாட்சி சுந்தரனார் செங்குந்தர் மேல்நிலைப்பள்ளி செனகிட்ஸ் மாண்டிச்சேரி பள்ளி இவை நான்கும் துவக்கப்பட்டுச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

1944ஆம் ஆண்டு துவக்கப்பட்ட கல்வி நிறுவனம் இன்று ஆல் போல் தழைத்து அருகு போல் வளர்ந்து பவள விழாவை கொண்டாடுகிறது. இந்தக் கல்வி நிறுவனங்கள், ஈரோடு மாவட்ட மக்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமைந்துள்ளது.

# ஆசிரியர் பயிற்சி முகாம்

## தென் தமிழ்நாடு (பெருமாநல்லூர், திருப்பூர்)



ஏப்ரல் 21 ஆம் தேதி, ஞாயிற்றுக்கிழமை அன்று காலையில், 19 மாவட்டங்களிலிருந்து 92 பள்ளிகளைச் சார்ந்த 246 ஆசிரியைகள் கலந்து கொண்ட ஏழுநாட்கள் ஆசிரியர் பயற்சி முகாம் நடைபெற்றது.

எக்ஸலன்ட் இராமசாமி அவர்கள் (சேவாபாரதி, மாநிலத்தலைவர்) பேசுகையில், கற்றலோடு மாணவர்கள் ஒழுக்கப்பண்புகளையும் பெறவேண்டும். சுற்றுச்சூழல், சமுதாயம், பள்ளிச்சூழல் ஆகியன குழந்தைகளின் குணநலன்களை மாற்றக் கூடியகாரணிகளாக விளங்குகின்றன. பொதுநலச்சேவையை மாணவர்கள் பேணும் வகையில் பணியாற்றிட வேண்டும் என்று கூறினார்.

திரு.முருகசாமி அவர்கள் (தாளாளர், விக்னேஸ்வரா வித்யாலயா மெட்ரிக்பள்ளி, பெருமாநல்லூர்) வாழ்த்துரை வழங்கியபோது, பண்புக்கல்வி என்பது மாணவர்களுக்கு மட்டுமல்ல பெற்றார்களுக்கும் அவசியமாகும். கற்பித்தல் என்பது பாடங்களை மட்டுமே போதிப்பது என்பது அல்ல. நல்ல பண்புகளையும் வளர்ப்பதே சிறந்த கல்வியாகும் என்று கூறினார்.

சுவாமிஜி அஜித் சைதன்யா (கோயம்புத்தூர்) வழங்கிய ஆசியுரையில், மனதில் தான் இறைத்தன்மை இருக்கிறது. அந்த இறைத்தன்மையை தெய்வத்தன்மையை தேசபக்தியாக மாற்றவேண்டும். பொது அறிவை விரிவாக்கிக் கொள்ளவேண்டும். அதனை ஆராய்ச்சி செய்ய வேண்டும். இவற்றையெல்லாம் மாணவர்களுக்குக் கொண்டு செல்ல வேண்டும் என்றார்.

திரு. உ. சுந்தர்ஜி (அமைப்புச் செயலாளர், வித்யா பாரதி, தமிழ்நாடு) அவர்கள் பேசுகையில், மனிதன் படிப்படியாக உயர்ந்து பொதுநலன் மிக்கவனாக மாற வேண்டும். பரம்பொருள் வரை விரிவடைய வேண்டும். இதுவே கல்வியின் நோக்கமாக அமைய வேண்டும். அனைவரும் மன அமைதியோடும், அனைத்து நலன்களையும் பெற்று வாழ வேண்டும் என்று பாரதமாதா வந்தனா பாடல் கூறுகிறது.உடல் ஆரோக்கியம் இன்றைய குழந்தைகளுக்குக் குறைந்து கொண்டு வருகிறது. ஹிந்துத்துவா மீது மிகுந்த பிடிப்பும், நமது பாரத நாட்டின் மீது உயர்ந்த மதிப்பும் கொண்டவர்களாக மாணவர்களை உருவாக்க வேண்டும். மாணவர்களைத் தன்னம்பிக்கை மிக்கவர்களாக வளர்க்க வேண்டும் என்று கூறினார்.

திருமதி. ஹேமாகண்ணன் (சிசுவாடிகா பொறுப்பாளர், திருவள்ளூர்) பேசுகையில், குழந்தைகள் எந்தச் செயலைச் செய்தாலும் அது குழந்தைகளுக்கான உடற்பயிற்சி ஆகும்.அன்பு ,ஆனந்தம், சுதந்திரம், அழகுணர்ச்சி மற்றும் படைப்பாற்றல் ஆகியவற்றின் மூலம் மனம் வளர்ச்சி அடைகிறது. குடும்பப் கல்வியையும் பெற்றோர்களுக்குப் புகட்ட வேண்டும் என்று கூறினார்கள்.

ஸ்ரீ கோபாலரத்தினம்ஜி “பஞ்ச கோசம்”என்ற தலைப்பில் உரையாற்றும்போது, உணவை உதாசீனப்படுத்தக் கூடாது. வீணடிக்கக் கூடாது. உடல் ஐம்பூதங்களால் ஆனது. மனதில் உள்ள அழுக்குகளை நீக்கி விட வேண்டும். சிறு வயதிலேயே காலம் தாழ்த்தாமல் இசை, ஓவியம் ஆகியவற்றை சொல்லித்தர வேண்டும். எந்தச் சூழ்நிலையிலும் ஆனந்தமாக இருக்கக் கற்றுக்கொடுக்க வேண்டும் என்று கூறினார்.

**ஸ்ரீ**கதிரவன்ஜி (ஒருங்கிணைப்பாளர், இதிகாச சங்கரண சமிதி) ''செய்யும் தொழிலே தெய்வம்'' என்ற தலைப்பில் பேசினார். தவறு செய்தவர்களின் தவறுகளைச் சுட்டிக்காட்டாமல் அதை மீண்டும் செய்யாத அளவிற்கு நிறையச் சம்பவங்களைச் சுட்டிக்காட்ட வேண்டும். குழந்தைகளின் உயர்வுக்கும் சிறந்த பண்பாட்டு நிகழ்விற்கும் உறுதுணையாக இருக்க வேண்டும் என்று கூறினார்.

**ஸ்ரீ** சூரிய நாராயணன்ஜி (மத்திய சேத்திர ஆச்சாரியா பிரசிசன்ப்ரமுக்) "கற்பித்தல் துணைக் கருவிகள்'' என்ற தலைப்பில் ஆசிரியர்களுக்குச் செயல்பாடுகள் மூலம் கற்பித்தார். அப்பொழுது கண்களில் பார்வைக் குறைபாடு இருந்தால் மூக்குக்கண்ணாடி ஓரளவிற்குப் பார்வைச் சரி செய்யும். ஆனால், பார்வையே இல்லை எனில் கண்ணாடி இருந்தும் என்ன பயன்? எனவே, முதலில் நீங்கள் கவனித்தல், கேட்டல் ஆகிய திறன்களை மேம்படுத்திக் கொண்டால் பேச்சுத் திறன் வளரும். துணைக்கருவிகள் துணைபுரியும் என்று கூறினார்.

**தி**ரு கேசவன்ஜி (முகாம் அதிகாரி, வித்யா பாரதி இணைச் செயலாளர், வடதமிழகம்) "வித்யா பாரதி அடையாளம்'' இந்த தலைப்பில் உரையாற்றும்போது, தனது வாழ்க்கையை அர்ப்பணிக்கும் மனப்பாங்கு கொண்ட இளைஞர்களை உருவாக்குவதற்கு ஏற்ற கல்வி முறையை வளர்ப்பதே நமது லட்சியம். இதன் மூலம் நாட்டுப்பற்று, பண்பாடு, கலாச்சாரம் ஆகியவற்றை மாணவர்களுக்கும் பெற்றோர்களுக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்று கூறினார்கள்.

**அ**ன்றைய இரவு அமர்வில் ''புகழோங்கிய பாரதம்'' என்ற தலைப்பில் உரையாற்றும்போது, பாரதத்தின் உண்மையான வரலாறு மறைக்கப்பட்டுள்ளது. அதுமட்டுமல்ல சுதந்திரப் போராட்ட வரலாற்று உண்மைகள் கூட மறைக்கப்பட்டுள்ளது. அவற்றை நாம் அறிந்து கொள்ள வேண்டும். பாரதம் பல்லாயிரம் ஆண்டு வரலாற்றைக் கொண்டது. இதனை அறிந்து மாணவர்களுக்குப் புகட்டுவோம்! பாரதத்தை உலகின் குருவாக்குவோம் என்று கூறினார்.

"**இ**யற்கை மருத்துவம்'' என்ற தலைப்பில் திருமதி நிவேதிதா அவர்கள் ஆற்றிய உரையில், நோயைப் பற்றிய அச்சம் தான் நோய்க்கான முதல் காரணம். விதைகளற்ற காய்கறிகளை உண்ணக் கூடாது. விரதங்கள் இருக்கும் பொழுது பசி மிகுந்த செல்கள் உருவாகிறன. அவை நோய்க் கிருமிகளை உருவாக்கும் வலிமை குறைந்த செல்களை அழித்து விடுகிறது. உடல், மனம், உயிர் மூன்றும் இணைந்தால் மரணமில்லாப் பெருவாழ்வு வாழலாம் என்றுகூறினார்.

**தி**ரு. பொன் ராமன் ஜி (கல்வி அதிகாரி, விவேகானந்தா கல்விக்கழகம்) "வித்யாபாரதியும் சுவாமி விவேகானந்தரின் கல்வி முறையும்'' என்ற தலைப்பில் நிகழ்த்திய உரையில், நமது நாட்டினுடைய கல்வி முறை மனிதனை உருவாக்குவதாக இருக்கும். மனிதா நீ மகத்தானவன் பரம் பொருளின் உருவானவன் என்பதை உணர்த்த வேண்டும். பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்தனவே என்ற பாரதியின் உணர்வு வேண்டும். தேசிய அறிவூட்ட வேண்டும்; பண்பாட்டை உணர்த்த வேண்டும்; திறமைகளை வளர்த்து உயர்த்த வேண்டும்; அதுதான் கல்வி என்று கூறினார்.

**ஸ்ரீ** சத்யநாராயணன்ஜி (ஆர்.எஸ்.எஸ். ஆலோசனைக்குழு, கோவைக் கோட்டம்) "புண்ணிய பூமி பாரதம்'' என்ற தலைப்பில்பேசியபோது, பரதன், கிருஷ்ணன்,தேவவிரதன், மார்க்கண்டேயன், அர்ஜுனன், அனுமன் போன்ற மிகச்சிறந்த மாமனிதர்கள் வாழ்ந்த புண்ணிய பூமி நமது பாரத பூமி. பாரதம் இறைவனால் கட்டமைக்கப்பட்ட ஞான பூமி, கர்ம பூமி என்பதை அடுத்த தலைமுறைகளுக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்று கூறினார்.

**தி**ரு சக்ரவர்த்தி ஜி (தலைவர்,வித்யா பாரதி தர்ஷிணசேத்திரம்,V.E.S துணைத்தலைவர்) ஆற்றிய உரையில், நமது பாரத தேசத்தில் ஆசிரியர்களுக்கு என்று தனிமரியாதையும் மதிப்பும் தனிச்சிறப்பு உண்டு. தன்னம்பிக்கை, பணியில் நம்பிக்கை, கற்பதில் நம்பிக்கை, தெய்வத்திடம் நம்பிக்கை ஆகியவற்றைக் கொண்டிருப்பவரே லட்சிய ஆசிரியராகத் திகழ முடியும் என்று கூறினார்.

நிறை விழாவில் பல ஆசிரியர்கள் முகாம் அனுபவங்கள் பற்றிப்பகிர்ந்து கொண்டார்கள். அப்பொழுது, காலம் தவறாமை, குழு மனப்பான்மை மற்றும் பல நற்பண்புகளை மாணவர்களுக்கு எளிதில் கற்பிக்கும் முறைகளை அறிந்து கொண்டோம். கற்பனைத் திறன், படைப்பாற்றல் திறன் ஆகியவற்றை மேம்படுத்திக் கொண்டோம். நமது நாட்டின் ஆன்மீகம், பாரம்பரியம் பற்றி அடுத்த தலைமுறைக்கு எப்படிப் போதிப்பது என்பதையும் அறிந்து கொண்டோம் என்று கூறினார்கள்.

டாக்டர் கிருஷ்ண செட்டி (தலைவர், வித்யா பாரதி உத்தர் தமிழ்நாடு) ஆற்றிய நிறைவுரையில், செய்யும் தொழிலே தெய்வம் என்று போற்றும் பண்பு நமது பாரத நாட்டில் உள்ளது. இதுபோன்ற பல பண்புகளைக் கொண்ட ஒரு சிறந்த உயர்ந்த நாடு நமது பாரத நாடு; பாரத பண்பாடு. இதனைக் காக்கும் காவலர்களாக நாம் இருப்போம் என்று கூறினார்.

**தொகுப்பு : மணலி பா.கனிராஜன்,**



# Resolutions passed in the Seminar held on the topic "Draft National Education Policy - A Tamil Nadu Perspective"

Vidya Bharathi, Tamil Nadu had organized a seminar on the draft of the NATIONAL EDUCATION POLICY 2019 to discuss on the "Tamil Nadu perspective" on Saturday, 22nd June 2019, at Agarwal Vidyalaya, 54 EVK Sampath Road, Vepery, Chennai – 600007.

Eminent educationists, Journalists, Principals, Correspondents of schools, representatives from teacher's association, spiritual leaders, social workers and many such others involved in education, participated and had given their opinions and suggestions.

Based on the discussions held in the seminar, the following were resolved unanimously.

**Stream lining of pedagogical pattern**

1. The proposal on a new developmentally appropriate curriculum and pedagogical structure for school education based on principles of brain development and learning to be developed based on a 5+3+3+4 needs a welcome note. It emphasis on all subjects- science, social sciences, art, languages, sports, mathematics with integration of vocational and academic streams in school would create an integrated and balanced development in students.

2. Vocational education being an integral part of education, providing access to vocational education to at least 50% of all learners by 2025 is welcome since it would create more opportunities for self sustenance.

3. Census examination at class 3, 5 & 8 should be open to NIOS students also. The students who successfully pass in the census examination must be allowed to join in schools offering formal education.

4. NIOS students should be allowed to write class X and class XII examinations in the formal school curriculum and examination.

5. There should be an opportunity given to the students to study the history of the State he lives in. Hence the social science syllabus should be framed in such a way that it should have 60% syllabus common to all States and 40% based on the local history and facts.

6. Online examination at regular intervals must be held for enabling the students who fail in board examinations.

7. Every Student must attend two years training in Scouts, NCC and NSS in Schools

8. Students must attend 12 camps of 2 to 3 weeks from class 5 in Disaster management, relief management, national integration etc.

9. The policy on adult education aims at 100 % literacy among the youth and adults by 2030. While we appreciate the noble aim of the Government, we caution that it will be an exercise in futility to provide universal education through schools alone. The Government should come up with inclusive initiative to evaluate and accredit non-formal education to achieve the goal.

**Flexibility through School Complexes and Special Education Zones**

10. The concept of School Complexes, comprising a number of geographically located schools, is a welcome move since it aims to provide academic autonomy in examination, sharing among the schools resource including subject teachers, sports, music and art teachers, counselors and social workers. This grouping exercise will also include review and consolidation of schools with very low enrolment (eg < 20 students)

11. The School Complex System aims for comprehensive teacher development programmes in synchronization with District Education Institutes and the Block and Cluster Resource centers. This will enhance the quality and skill of the teachers and provide better teaching standards.

12. Creating Special Education Zones in disadvantageous regions with substantial Central Government funding will enable inclusive education for underrepresented groups. Central Government providing financial support in the ratio of 2:1 to the State Governments is appreciated. At the same time such zones should not become anti national hubs.

13. In the assessment and appraisal of a teacher, the School Management Committee should have a role to play / should be included along with Principal & Education Officer.

14. Schools attaining certain standards and maintain them over a period of five years must be given permanent recognition. Such schools should be allowed to engage independent quality rating agencies approved by the Government of India.

15. NIOS must not stipulate minimum land and building criteria as done currently. Enough space must be given to non formal learning.

16. Students pursuing Vedic and Samskritham studies or litrerature in their vernacular languages through non-formal

education system must also be considered eligible to be conferred with the integrated B.Ed degree after necessary qualifying examination.

**Three Language Formula**

17. The policy will ensure the preservation, growth and vibrancy of all Indian languages. It honours the classical languages like Tamil and creates awareness to appreciate and protect them by providing opportunities to teach and learn them in schools all over the country.

18. The proposal to implement three language formula throughout the country is a welcome move since it offers an opportunity for the local student to learn another Indian language, and for the students of a particular State pursuing studies in another State to learn his mother tongue as third language. The move also enables students to learn Samskritham, Urdu or Prakrit as a third language in support of their main studies in Ayurveda, Unani or Homeopathy.

20. In Tamilnadu a number of parents and students are willing to learn and study Hindi as a third language. It opens up trade opportunities throughout India and also access to technical and higher education in any part of the country. Besides, the parents in Tamilnadu appreciate the role of Hindi as a link language between the State and the Central Governments. Political opposition to Hindi in Tamilnadu should not hinder the learning option of the students.

21. A school can offer medium of instructions in any language for science, social science and mathematics. However the State language also must be taught to the students.

22. Education in the local language/mother tongue till Grade 5 preferably till Grade 8 with a flexible (bilingual) language approach would create interest in learning and better understanding of the concepts. The proposal to impart legal education in bilingual study will re-orient the law students to appreciate Bharateeya system of living, beliefs and faiths.

Higher education should provide an opportunity for rural students to study in mother tongue.

**Spirituality education**

23. National Educational policy 2019, plays emphasis on the student acquiring values such as truth, ahimsa, respect to elders, Swach Bharath etc. However good the values are imbibed in them, without inculcating spirituality it would be a double edged weapon. All terrorist are true to their organisations and wedded to their ideologies. They lack spiritual quotient. The values without spirituality drive them to become specialist criminals or terrorists.

24. Spirituality is a Science. It is not Superstition. New Education Policy has not paid adequate attention for inculcating spirituality in students. Every student should be allowed to learn within himself. Meditation increases concentration and Yoga balances the mind. Learning meditation and yoga should be an integral part of spirituality learning.

**Caution against School Accreditation**

25. While we welcome the proposed accredition system of grading and ranking of primary school education, we caution that the same could become a tool for profiteering by exploitation.

26. A teacher in the course of her continuing professional education acquires additional qualifications. They will also be exposed to variety of exposures such as rural service, tribal service, examinations and evaluations peer teaching and extracurricular duties such as vernacular computing, NCC, NSS, etc. Such teachers must gain additional accredition points by an independent accrediting body under the roof of the school regulatory authority. Teacher accredition goes a long way in the search for leadership of schools.

27. We welcome the proposal to create a National Language and Maths repository. This will be a cost effective alternative to smart classes and have a wider reach due to its multi lingual presentation.

**Right To Education ( RTE )**

28. While the proposal to broaden Right to Free Education(RTE) from the age of 3 to 18 will go a long way in addressing the goal of Universal Education, it will be complete only if the religious minority educational institutions are also brought within the ambit of RTE Act. Religious minority institutions constitute a majority among the school educational institutions and their present exclusion pushes a heavy financial burden on the few non-minority schools. If the RTE act is made applicable to minority religious institutions, it would substantially facilitate Universal education.

29. Non-minority institutions, mostly philanthropic ventures, risk closure due to non viability. The non-minority institutions are either not reimbursed the cost of RTE burden or there is a torturous delay in reimbursement. At times the State Governments unilaterally reduced the quantum of reimbursements.

30. The restriction on eligibility for RTE applicants to be within the radius of one kilometer of the school should be widened to five kilometers. Such a widening of the reach of RTE applicants will enable rural students to study in Private schools upto five kilometers.

31. A student seeking admissions under RTE must first exhaust admissions in a Government school within the radius of five kilometers before seeking admissions in a private

school.

32. Fee reimbursements for students admitted under RTE should be made by direct transfer to beneficiaries. The amount per student should be credited in the bank account of the parent. The school should not be queuing before the Government for reimbursement of RTE fee. After getting admissions for their wards under RTE parents should remit fee to the school.

33. The Government of India should publish the Cost Education Index on the basis of Government survey from Kendra Vidyalayas and State Government schools. The quantum of reimbursement should either be the fee fixed by the fee fixation committee or the cost education index and whichever is more.

34. The reimbursement to the parent must be made in advance preferably in the month of June so that neither the parent nor the school is burdened with the cost of free seats.

**Additional Accreditation for B.Ed. qualification**

35. The four year B.Ed integrated course will produce professional teachers with specialization in various subjects of their choice. The vacancies in educational institutions may not exactly match the specialization of the teachers. The availability of qualified teachers with specialisation in languages especially English and Social science is very limited. Hence there is a need to re- orient and impart training in the required subjects by the institutions offering employment. However such training will finally be evaluated by the Government and additional accreditation can be given to the qualified teacher. Every educational institution should therefore be enable to offer in-house training on several subjects for the purpose of additional subject accreditation.

36. The proposal to guarantee employment to tribal, rural and girl students after completing four year integrated B.Ed programme is appreciated. We suggest that appropriate incentives/fellowships to be provided for such students pursuing postgraduate and doctoral qualifications also.

**Mandatory training for Anganvadi teachers**

37. The proposal to do away with unqualified persons as para teachers is welcome. However engaging untrained teachers for Anganvadi's is also not desirable, unless the Anganvadi teachers are trained in psycho-motor skills, child psychology and in teaching methodology, they should not be appointed.

**Media Literacy**

38. Nearly sixty percent of journalist are not qualified or accredited. Forty percent of news published and telecasted are fake news today.

Media education needs to be professionalized with the structured education and professional ethics.

**Professional accountability of teachers**

39. Teachers have to be true to the National Education Policy in order to execute the policy with reasonable success. Therefore they have to be made accountable, answerable and responsible in the implementation of the National policy. Every teacher needs to be educated on the nuances of the policy and later followed by teacher assessment, appraisal and appropriate evaluation.

Every teacher is an eternal student and understanding of the National policy is part of the continuing professional education.

Appreciation of proposals towards equitable and inclusive education

40. The proposal to provide breakfast in addition to midday meal for promoting equitable and inclusive education will address the nutrition needs of the under privileged children and shall also reduce the school dropouts.

41. The proposal to provide financial support by way of scholarship to individual students through a National Fund will go a long way in addressing the needs of students from under privileged group. Tamilnadu Govt in providing free education, uniform, books, mid-day meals, bicycle, lap tops and transport in Govt Schools. (The proposed Scholarship through National Fund should be provided as additional benefit to such students. The support by way costless necessities and scholarship should be uniform Throughout the country) This may arrest dropouts in schools besides preventing children from being drawn into child labour.

42. The formation of Rashtriya Shiksha Aayog or National Education Commission headed by the Prime Minister is a welcome move. The Aayog will be the custodian of education in our country and would integrate the national vision of education. Setting up of State level apex bodies would give required freedom to the States in educational policy making.

**Parents are not good regulators**

43. While the proposal to set up State School Regulating Authority will bring about uniformity and reduce red tape, the proposal to empower parents as de-facto regulators is unwelcome as it would promote irresponsible activism and anarchy in the school environment, leaving scope for unwanted elements with vested interest to disturb the smooth running of schools.

Sri.L.Ramamurthy Secretary
VidyaBharathi Uttar TamilNadu

# ஐந்து நாள் ஆசிரியர் பயிற்சி முகாம்

## (வட தமிழ்நாடு-சென்னை அகரமேல் 23.04.19 - 27.04.19)

துவக்க நிகழ்ச்சியில் திரு பிரகாஷ்ஜி (மாநில பொருளாளர் ஆர்.எஸ்.எஸ்.) சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டார். ராஷ்ட்ரிய ஸ்வயம்சேவக் இயக்கம் தோன்றியதன் பின்னணி அதன் தேசப்பணி ஆகியவற்றை எடுத்துக் கூறி அதிலிருந்து உருவான வித்யா பாரதி அமைப்பின் தோற்றம் வளர்ச்சி மற்றும் அதனுடைய குறிக்கோள்களை எடுத்துரைத்தார். முகாமின் நோக்கம் ஒற்றுமை, தேசப்பணி ஆகியவற்றை நமக்கு பயிற்றுவிப்பதாகும். நம் பாரத தேசம் பல்வேறு போராட்டங்களைச் சந்தித்து இருக்கிறது. வேலுநாச்சியார் ஆங்கிலேயருக்கு எதிராகப் படை திரட்டிப் போர் புரிந்தார். எதிர்பாராதவிதமாகச் சில சிக்கல்கள் ஏற்பட வேலுநாச்சியாரும் உடன் இருந்தவர்களும் காடுகளை கடந்து சென்று மறைந்து இருக்க வேண்டிய சூழல் ஏற்பட்டது. வேலுநாச்சியாரும் மற்ற வீரர்களும் காட்டைக் கடந்து செல்லும்போது மாடு மேய்க்கும் பெண்ணான உடையாள் அவர்களுக்கு உதவி செய்ததோடு ஆங்கிலேயரிடம் அவர்கள் பிடிபடாமல் பாதுகாத்தார். அவரே இந்த தேசத்திற்கான பலிதானி ஆக தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். அவரின் நினைவாகவே சிவகங்கை மாவட்டத்தில் வெட்டுடைய காளி என்ற பெயரில் கோவில் அமைக்கப்பட்டு




இன்றும் தெய்வமாக வழிபடப்படுகிறார். நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் 'ஆசாத் இந்து போர்ஸ்' என்ற இயக்கத்தை முதன்முதலில் உருவாக்கினார். ஆங்கிலேயர்களை எதிர்த்தார் இத்தகைய வீரமிக்கவர்களின் தேசப்பணியைத் தொடர்ந்து நாம் செயல்படுத்திட வேண்டும் தேசப்பணி மற்றும் தெய்வீக பணி ஆகியவற்றில் நாம் ஈடுபட்டு நம்முடைய குழந்தைகளுக்கும் எதிர்கால இளைஞர்களுக்கும் நாம் வழிகாட்டியாக இருக்க வேண்டும் என்றார்.

திரு ராமகிருஷ்ணன் பிரசாத் (மாநில செயலாளர் ஆர்.எஸ். எஸ்.) அவர்கள் பேசுகையில், நாம் ஒவ்வொருவரும் நம்முடைய சுவாசத்தை ஆழ்ந்து கவனிக்க வேண்டும். விழிப்பு நிலையிலும் கண் மூடிய நிலையிலும் கவனிக்க வேண்டும். இரண்டிற்கும் வேறுபாடு உண்டு. மூன்று விதமான ஆளுமைகள் (Experiencer, Performer, Knower). இந்த மூன்றையும் எவ்வாறு செயல்படுத்துவது என ஐந்து வழிமுறைகளை கூறினார். (How to excel?)

- சிரத்தை
- அறிவு (knowledge)
- தான் அறிந்ததைப் பயன்படுத்துதல் ( implementation)
- அச்செயலில் கவனம் செலுத்துதல் ( focused attention)
- இது எவ்வளவு நபருக்குப் பயன்பட்டது

அவர் மேலும் பேசுகையில், வெங்கடேஷ் என்ற வடநாட்டு துப்புரவுத் தொழிலாளி தனது சிரத்தையின் மூலமாக பாரதப் பிரதமர் திரு மோடி அவர்களின் கரங்களால் விருது பெற்றதை எடுத்துரைத்தார். திரு. எஸ்.ஆர். ரங்கநாதன் அவர்களின் நினைவாக ஆகஸ்ட் 12 அன்று நூலக தினம் கொண்டாடப் படுகிறது என்பதையும், கூடைப்பந்து விளையாட்டு வீரர் மைக்கேல் ஜோர்டான் அவர்களுடைய வாழ்க்கை நிகழ்வையும் இவற்றிற்கு உதாரணமாக கூறி காணொளி ஒன்றை ஒளிபரப்பினார்.

திரு.சுந்தர்ஜி அவர்கள் பேசுகையில், வித்யா என்றால் கல்வி, பாரதி என்றால் பாரத நாட்டைச் சேர்ந்த கல்வி என்று பொருள் மனிதனின் மனதைத் தூய்மைபடுத்துவது தான் உண்மையான கல்வி. ஆனந்தமான வாழ்க்கையில் மற்றவர்களுக்கு உதவ வேண்டும். அந்த மனதை அளிப்பது தான் கல்வி தனிமனிதனில் தொடங்கி இறைவனோடு கலத்தல் என்பதே கல்வி. Sa Vidya ya vimuktaye . செய்யும் தொழிலிலும் தெய்வீகத்தன்மை வேண்டும். அதுவே ஆயுத பூஜை. திலகர் தன்னுடைய மகனுக்கு ஒரு சிறந்த அறிவுரை கூறினார். அது 'ஒருவேளை நீ செருப்புத் தைக்கும் தொழிலாளி ஆனால் கூட உனது ஊரில் நீயே சிறந்த செருப்பு தைக்கும் தொழிலாளியாக விளங்க வேண்டும்' என்பதே ஆகும். இன்றும் கூட இலங்கை பள்ளிகளில் சரஸ்வதி தேவிக்குச் சிலை உண்டு கல்வியைக் குறிப்பதே வெண்மை நிறம். அதனால்தான் சரஸ்வதி தேவி அணிந்துள்ள ஆடை வெண்மை நிறம், அவரது வாகனமான அன்னப்பறவை வெண்மை நிறம், அவர் அமர்ந்திருக்கும் தாமரை வெண்மை நிறம். வித்யா பாரதி வந்தனாவில் ஆழ்ந்த கருத்துக்கள் பல உண்டு அதை நாம் அனைவரும் அறிந்திருத்தல் வேண்டும் தற்பொழுதுள்ள குழந்தைகளிடம் உண்மை பேசும் தன்மை பகிர்ந்து உண்ணுதல் போன்ற சிறந்த பண்புகள் குறைந்து காணப்படுகின்றன இதற்குக் காரணம் பெற்றோர்களே எனவே நாம் எதிர்வரும் சமுதாயத்தை நற்பண்புகள் நிறைந்த சமுதாயமாக உருவாக்க பாடுபட வேண்டும் வாழ்க்கையில் சவால்களையும் பிரச்சினைகளையும் தாங்கக்கூடியவர்களாக அவர்களை உருவாக்க வேண்டும் நமது கல்வியில் ஹிந்து தன்மை இருக்கிறது அதை தேசியத் தன்மையிலும் வளர்ச்சி பெற்றிருக்கிறது.

திரு ரவீந்திரன்ஜி அவர்கள் பேசுகையில், ஆசிரியர்களான நமக்கு முன்பு இரண்டு கேள்விகள் உள்ளன ஒன்று நாம் எதைக் கற்க வேண்டும், இரண்டு நாம் எதைக் கற்பிக்க வேண்டும். இன்றைய கல்வி முறையை ஐரோப்பிய அழிவைத்தான் பரவலாக்குகிறது. தைத்திரீய உபநிஷத்தில் ஒரு கதை உள்ளது வருண் ரிஷி புகழ்பெற்ற ரிஷியாக விளங்கினார் அவரிடம் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்கள் கல்வி கற்று வந்தனர் எனினும் அவர் தன்னுடைய மகனான பிருகு முனிவரை வேறு ஒரு குருவிடம் கல்வி கற்க அனுப்பி வைத்தார். அவரும்

அவ்வாறே கல்விகற்று சில ஆண்டுகளுக்கு பின்பு திரும்பினார் அவ்வாறு திரும்பியவரிடம் அவருடைய தந்தை ஒரு கேள்வியை முன் வைத்தார். அதில் நீ எதை கற்ற பிறகு கற்பதற்கு வேறு ஏதும் இல்லை என முடிவு செய்தாய் எனக் கேட்டார். இவ்வாறு பல முறை இந்த கேள்வியை கேட்க ஒவ்வொரு முறையும் பிருகு முனிவர் வெவ்வேறு பதில்களை எடுத்துரைத்தார். பல ஆண்டுகளுக்குப் பிறகே அவர் இந்த உலகம் ஆனந்தமய கோசம் ஆனது என்பதை உணர்ந்தேன். சமாதி நிலை என்ற பேரானந்தத்தை உணர்ந்தேன் என்றார்.

**தி**ரு ராம்குமார்ஜி அவர்கள் உரையாற்றினார், நம் பாரதத்தின்கல்வி மிகவும் புகழ் வாய்ந்தது. நம்முடைய பாரம்பரியத்தில் உள்ள ஞானிகள் குருமார்கள் குறித்து ஆங்கிலேயர்கள் மாறான கருத்தைப் பதிவு செய்துள்ளனர். எடுத்துக்காட்டாக நாரதர். நீதி சதகம் எனும் நூலை இயற்றியவர் மிகப் பெரும் ஞானி. ஆனால் இவரைக் கலகத்தின் பிறப்பிடமாக கூறுகின்றனர். அதேபோல் வீரமாமுனிவர் எழுதிய பரமானந்த குரு கதை நம் கல்வி முறையைக் கேலி செய்யும் பாங்கில் அமையப் பெற்றது. இவற்றை எல்லாம் நாம் புரிந்து கொண்டு நம்முடைய கல்வி குறித்த தெளிவு பெற வேண்டும். அழகிய மரம் எனும் நூலை நாம் அனைவரும் தவறாமல் படிக்க வேண்டும். அதில் நம் குரு சிஷ்ய பாரம்பரிய கல்வி குறித்து சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. மாணவர்கள் குருவைத் தேடிச் சென்று கல்வி கற்கும் நிலை மிகுந்திருந்தது.

**தி**ரு சக்கரவர்த்திஜி அவர்கள் பேசுகையில், நம் பாரத தேசம் இழந்த பெருமையை மீண்டும் பெற்று ரத்தின சிம்மாசனத்தில் அமரும் நாள் வந்துவிட்டது. அதற்கு மக்களைத் தயார் செய்வதே கல்வி. அத்தகைய கல்வியை வழங்குவது ஒரு ஆசிரியரின் கடமையாகும். சனாதன தர்மத்தின் பெருமையை எடுத்துக் கூற வேண்டும். அன்பு அறிவு தேற்றம் அவாவின்மை இவை நான்கும் ஒரு விஷயத்தைப் பிறருக்கு எடுத்துச் சொல்லும் போது மேற்கொள்ள வேண்டிய தாகும் எந்த ஒரு பிரதிபலனும் எதிர்பார்க்காமல் கற்ற விஷயத்தைச் சமுதாயத்திற்கு எடுத்துச் சொல்ல வேண்டும். ஷதக்சீலா பல்கலைக்கழகத்தில் 14000 மேற்பட்ட மாணவர்கள் படித்து உள்ளனர். இத்தகைய பெருமை மிக்க பாரம்பரியத்தில் வந்த நாம் இவை அனைத்தையும் பாதுகாக்க வேண்டும், மீட்டெடுக்கவேண்டும், மாணவர்களிடம் கொண்டு சேர்க்க வேண்டும், இதயத்தை வலுப்படுத்த வேண்டும் என்றார்.

**கா. விஜயபாரதி ஜோதி நகர்**

# பஞ்சகோசம்

## திருப்பூர் ஆசிரியர் பயிற்சி முகாமில் சமூக சேவகர் திரு. கோபால்ரத்தினம், ஆற்றிய உரையின் சில பகுதிகள்

**ம**ழலையர் வகுப்பு கற்பித்தலின் மூலமாகக் குறிப்பிட்ட திறமைகள் ஆற்றல்கள் ஆகியவற்றைப் பெற்றுள்ளேன் என்பவர்கள் உங்களில்யாரேனும் உண்டா?

- தற்காலத்தில் உள்ளவர்கள் தங்களது செயல்கள் , நிலைகள் பற்றிக் கவலைப்படுவதில்லை.
- சிறு குழந்தைகள் எதற்கு அழுகிறது என்றே தெரியாது. மிகவும் விழிப்போடு செயல்பட வேண்டும்.
- உங்களுக்கு மூன்றாவது கண் கொடுத்தால் எங்கே வைத்துக் கொள்வீர்கள்?
- இந்த வினாவிற்கு நம்மிடம் புதிதானஎந்தச் சிந்தனையும் தோன்றாது.
- இந்தக் கேள்வியை உயர்நிலை மேல்நிலை வகுப்பில் உள்ள மாணவர்களிடம் கேட்டால், சிவனைப்போன்று நெற்றிக் கண்ணாக வைத்துக் கொள்வேன் என்று கூறுவார்கள்.
- நடுநிலை வகுப்பிலுள்ள மாணவர்களிடம் கேட்டால், நாங்கள் முதுகில்அக்கண்ணை வைத்துக் கொள்வோம். ஏனெனில், பின்னால் நடப்பதைப் பற்றி அழகாகத் தெரிந்து கொள்ளலாம் என்பார்கள்.
- அதே வினாவை மழலையர் வகுப்பில்பயிலும் குழந்தைகளிடம் கேட்டால், அந்தக் கண்ணை விரல் நுனியில் வைத்துக் கொள்வோம் என்று கூறுவார்கள்.
- அதற்குக் காரணம்,வீட்டில் உயரமான இடத்தில் வைத்திருக்கின்ற பொருள் எது என்று பார்க்க முடியும் என்று கூறுவார்கள்.
- இது மிகவும் வியப்பான கற்பனையாகும். சிந்தனை புதிதாக இருக்கும் அந்த வயதில்.
- வாழ்க்கையில் நாம் தொடர்ந்து பயணிக்கும் பாதைகளைக் கூட மாற்றுவதில்லை. அதேபோல, நமது சிந்தனைகளும் ஒரே மாதிரியான எண்ணத்தையே தோற்றுவிக்கின்றன.
- கண்ணாடி முன்னால் நின்று நாம் அதிகமாக எதைப் பார்க்கிறோம்? நிலையில்லாத இறந்து போகின்ற உடல் செல்களையே பார்த்து மகிழ்கின்றோம்.
- ஒரு நாளைக்கு சராசரியாக 600 கி.மீ. ஓடுகிறது. தூரத்துச் சூரியனையும் அருகில் இருக்கின்ற பொருளையும் கணப்பொழுதில் நம் மனக்கண் முன் காட்டுகிறது. அதுதான் நமது கண்கள்.
- இருளில் நடந்து செல்லும்பொழுது 10 விநாடிகள் மட்டுமே ஒன்றையும் காட்டாது. அதன் பின்பு அனைத்தையும் ஓரளவிற்கு நமக்குத் தெரியப்படுத்தும் நமது கண்கள்.
- வண்ணங்களைப் பிரித்து காட்டுகிறது. கண்ணுக்குள் ஏதேனும் நோய்க் கிருமிகள் புகுந்துவிட்டால் கண்ணீர் மூலம் தனது எதிர்ப்பைத் தெரிவித்து, அழித்து வெளியே தள்ளிவிடுகிறது.
- புளியை நினைத்தவுடன் உமிழ் நீரைச் சுரக்க ஆரம்பிக்கிறது வாய்.
- உணர்வைத் தொட்டுச் சாப்பிட வேண்டும். இந்த உணர்வுகள் கடத்தப்பட்டு ஐம்புலன்களும் உணரவேண்டும்.
- உணவினைக் கண்ணால் கண்டு ரசித்து ஆனந்தமாக உண்ணவேண்டும்.
- அப்பொழுதுதான் உடலில் உள்ள ஜீரண உறுப்புகள் தயாராகும்.
- கடுமையான கட்டிடத் தொழில் செய்யும் தாய்கூடத் தனது குழந்தையின் உணர்வுகளை அறிந்து உடனே செயல்படுவாள்.
- சுமார் எட்டாயிரம் கிலோ மீட்டர் முதல் ஒரு லட்சம் கிலோ மீட்டர் நீளம் வரையுள்ள ரத்தநாளங்கள் நமது உடல் முழுவதும் பின்னிப் பிணைந்துள்ளன.
- இது போன்று நமது உடல் எண்ணற்ற அற்புதங்களை உள்ளடக்கியுள்ளது.

- அவற்றை நாம் முறையாகப் பேணவேண்டும். சரியாகப் பயன்படுத்த வேண்டும். அதற்கு அடிப்படையாக அமைவது எது?
- உணவுதான். அதை நாம் அன்னமயகோசம் என்று அழைக்கிறோம்.
- உணவு உண்பதால்தான் உடல் உறுப்புகள் அனைத்தும் உருவாகிறது தாய் உண்ட உணவைத்தான் சிசுவும் தொப்புள் கொடி வாயிலாகப் பெற்றுக்கொள்கிறது.
- உடல் உறுதிக்கு, ஆற்றலுக்கு உடற்பயிற்சி, யோகா போன்றவற்றைச் செய்யலாம்.
- படிக்கட்டுகளில் நன்றாக ஏறி இறங்குங்கள்.
- உணவை உதாசீனப்படுத்தக்கூடாது. வீணடிக்கக்கூடாது. அதனைக் கிண்டல் செய்யக்கூடாது.
- உடல் ஐம்பூதங்களால் ஆனது.
- கோசம் என்பதன் பொருள் திரை என்பதாகும். ஐந்து வகையான திரைகளை உடையது நமது சூட்சும சரீரம்.

மனோமயகோசம்

- நாம் இசையை மிகவும் விரும்பிக் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது நமது கண்கள் தானாகவே மூடும். அதுவே, மனோன்மயம்.
- தற்காலத்தில் வியப்பு என்ற மெய்யுணர்வே மறத்துப் போய்விட்டது.
- இயற்கைக்காட்சியைக் கண்டு மகிழும் எண்ணம் வேண்டும்.
- இதற்கு மனோமயகோசம் இருக்க வேண்டும்.

விஞ்ஞானமயகோசம்

- பிடிக்காத ஒரு பொருளைப் பார்த்து ஒதுக்குவது மனதின் வேலை.
- அதனை எவ்வாறு சரிசெய்வது என்று சிந்திப்பது விஞ்ஞானமய கோசம்.
- மனம் சொல்வதைக் கேட்பவன் மனம் போன போக்கில் போகிறவன். புத்தி சொல்வதைக் கேட்டுச் செயலைச் செய்பவன் புத்திசாலி.
- புத்திசாலிதான் சரியான முடிவை எடுக்க முடியும்.
- மனதில் உள்ள அழுக்குகளை நீக்கி விட வேண்டும் என்பதில் காலம் தாழ்த்தாமல், இசை, ஓவியம் ஆகியவற்றில் கவனத்தைச் செலுத்த வேண்டும். அப்பொழுதுதான் மனோன்மயம் வளரும்.
- நாமே சுயமாக சிந்தனை செய்ய வேண்டும்; நமக்கு என்ன தேவை என்பதை நாமே முடிவு செய்ய வேண்டும். அதுவே விஞ்ஞானமயகோசம்.
- சில ஆண்டுகளுக்கு முன்னாள் லிபியா நாட்டில் நடந்த ஒரு செய்தியைப் படித்தேன். அதை உங்களுடன் பகிர்கிறேன். லிபியா நாட்டில் ஒரு மலைக்குன்று. அந்தப் பகுதியில் ஆயிரக்கணக்கான செம்மறி ஆடுகளை மேய்ப்பதற்காக நூற்றுக்கணக்கான ஆடு மேய்ப்பவர்கள் அங்கு வேலை செய்து கொண்டிருந்தார்கள்.அவர்கள் தங்கள் ஆடுகளை மேயவிட்டுவிட்டுச் சொக்கட்டான் ஆடுவார்கள்.அப்படி ஒரு நாள் அவர்கள் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது செம்மறி ஆடுகள் மலை முகட்டிற்குச்சென்றுவிட்டன. முன்னே சென்ற செம்மறி ஆடு பள்ளத்தாக்கில் விழுந்தது.பின்னால் சென்று கொண்டிருந்த செம்மறி ஆடுகள் அதனைத் தொடர்ந்து தாம் என்ன செய்கிறோம் என்பதை அறியாமல் ஒவ்வொன்றும் கீழே விழுந்து கொண்டே இருந்தன.இப்படி அந்தப் பள்ளத்தாக்கில் விழுந்து கொண்டிருந்த செம்மறி ஆடுகளைக் காப்பதற்காக, ஆடு மேய்ப்பவர்கள் எவ்வளவு கத்தியும் பயன் இல்லை. கிட்டத்தட்ட 400 க்கும் மேற்பட்ட ஆடுகள் விழுந்து இறந்து கிடந்தன.அதன் மேலே விழுந்திருந்த ஆடுகளில் பல பலத்த காயங்களுடன் மீட்கப்பட்டன.
- கிட்டத்தட்ட நிறைய பேர், அதிலும் மெத்தப் படித்தவர்கள் இத்தகைய செம்மறி ஆட்டுக்கூட்டம் போலத்தான் சிந்தனையின்றி வாழ்கிறார்கள்.
- தொலைக்காட்சியில் புதிய விளம்பரங்கள் எது வந்தாலும் அந்தப் பொருட்களை வாங்க வேண்டும் என்று தான் இருக்கிறார்களே தவிர, அதனைப்பற்றிச்சிந்திப்பதே கிடையாது.
- குழந்தைகள் அதிகமாக விரும்பி உண்ணுகின்ற காம்ப்ளான், ஐஸ்கிரீம் போன்ற பல்வேறுபொருட்களில் எலும்புத்துகள் சேர்க்கப்படுகின்றன என்பது நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும்?

இதைப்பற்றி எல்லாம் சிந்திப்பதுதான் விஞ்ஞானமய கோசம்.

- நாம் வாழும் பூமியானது ஒரு நிமிடத்திற்கு இருபதாயிரம் கிலோ மீட்டர் வேகத்தில் சுற்றுகிறது. அதில் தங்கியிருக்கின்ற நமக்கு அது புலப்படுவதில்லை.
- பிரானன்... பரமேஸ்வரன் அவனுடைய சக்தி தான் இந்த உலகையே சுழற்றியாட வைக்கிறது.
- அதில் ஓர் அணு அளவு கூட இல்லாத பிராணமய கோசம் தான் நமது உடலில் உள்ளது; நம்மை இயக்குகிறது. இவற்றை எல்லாம் நமக்குத் தருவது அன்னம் தான்.

ஆனந்தமய கோசம்.

- இது நம்மை எப்பொழுதும் ஆனந்தமயமாக வைத்துக் கொண்டிருக்கும் ஒரு இறை நிலை.
- பகவான் கிருஷ்ணர் சிறையில் பிறந்தார்.
- பிறந்ததிலிருந்து ஐந்து வயதிற்குள் எத்தனை போராட்டங்கள்.. தன் உயிரைக் காத்துக் கொள்வதற்கு. அத்தகைய வேளையிலும் ஆனந்தமாக இருந்தானே.
- ஆகவே, நீங்கள் எந்தச் சூழ்நிலை வந்தாலும் ஆனந்தமாக இருங்கள்.

மேலே குறிப்பிட்ட ஐந்து கோஷங்களை உடையவர்களே நாம். இவை ஒவ்வொன்றையும் மேலும் வளர்ப்பதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

தொகுப்பு : மணலி கனிராஜன்.



## அகில உலக யோகா தினம் ஜுன்-21





நேதாஜி வித்யாலயா -மேடவாக்கம்






சங்கரபால வித்யாலயா-பள்ளிக்கரணை





இராஜா தேசிங்கு மெட்ரிக் பள்ளி -சத்தியமங்கலம்





வீனஸ் மெட்ரிகுலேசன் பள்ளி - வாழப்பாடி